உ

சிவமயம்

# நகரத்தாரும் உபதேசமும்

ஸ்ரீலஸ்ரீ ரவீந்திர சுவாமிகள் M.A.



கலாமடம் பாதரக்குடி ஆதீனம்
பாதரக்குடி - 623 307

உ

# குரு பீடங்களின் வரலாறு

'மாதா பிதா குரு தெய்வம்' என்பது முதுமொழி' நன்ருக குரு வாழ்க குருவே துணை என்று நாம் முன்பு பள்ளிகளில் பாடம் தொடங்குவது வழக்கம். இப்பண்பாட்டுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக நகரத்தார்கள் தமக்கென குருபீடங்களை ஏற்படுத்தி அவற்றை சுமார் ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளாகப் பராமரித்து வருகிருர்கள் எனவே தமது குருபீடங்களைப் பற்றியும் அவற்றின் பணியாகிய பஞ்சாட்சர உபதேசத்தைப் பற்றியும் நகரத்தார் அனைவரும் அறிந்துகொள்ள வேண்டியது மிகவும் அவசிய மாகும்.

தேவகோட்டை வீர. லெ. சின்னயசெட்டியார் அவர்கள் எழுதியுள்ள 'நகரத்தார் சரித்திரம்', பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள் எழுதியுள்ள 'நகரத்தார் வரலாறு' 'இளையாற்றகுடிமான்மியம்' 'பழனிக்காவடியும் நகரத்தார் அறப்பட்டயங்களும்' ஆகிய நூல்களில் இந்த குருபீடங் களைப் பற்றிய வரலாறு காணப்படுகிறது.

## அகோரசிவரும் ஈசானசிவரும்

இக்கலியுகத்தில் சிவதருமங்கள் குறைவுபடாமலிருக்கும் பொருட்டு சிவபெருமான் தமது திருமுகங்களிலிருந்து ஈசானசிவர், அகோரசிவர் என்ற இரு சிவயோகியர்களைத் தோற்றுவித்தார். இவ்விருவரும் சிவாகமங்களுக்குப் பத்ததிகள் எழுதியுள்ளனர். அதன்படியே இன்றும் கும்பாபி ஷேகம் முதலியவை நடைபெறுகின்றன. எனவே இவ்விரு வரும் சைவத்திற்குத் தூண்போன்றவர்கள். இவ்விருவரில் அகோரசிவர் சிதம்பரத்திலும் ஈசானசிவர் மதுரையிலும்

தங்கியிருந்து திருத்தொண்டாற்றி வந்தனர். இவர்களை முறையே சோழமன்னனும் பாண்டியமன்னனும் ஆதரித்து வந்தனர். இவ்விருவருமே இந்த குரு பீடங்களைத் தோற்று வித்தவராவர்.

## காவிரிப்பூம்பட்டிணத்தில் நகரத்தார்கள்

நகரத்தார்கள் முதலில் நாகநாட்டிலுள்ள 'சாந்தியாபுரி' என்ற ஊரிலும், காஞ்சிபுரத்திலும் வாழ்ந்திருந்து பின்னர் கி.மு. 708-ல் காவிரிப்பூம்பட்டிணம் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் ஆதிமுதல் சிவமதத்தைப் பின்பற்றுபவர்களாயினும் சில காலம் சிவதருமங்களைக் கைவிட்டதனால் செல்வமிழந்து துயருற்றனர். கோவலன் மரபினர் சமணசமயத்தைச் சார்ந் திருந்தது இங்கு நினைவு கூறத்தக்கது. ஒருசமயம் இவர்கள் சிதம்பரம் சென்றிருந்தபொழுது அங்கு உணவின்றித் தவித் தனர். அப்பொழுது அகோரசிவாச்சாயார் இவர்களுக்குத் தமது திருமடத்தில் அன்னமிட்டு உபசரித்தார். சிவதருமங் களைக் கைவிட்டதே அவர்களுடைய துயருக்குக் காரணம் என்றும் கூறினார். அவர்களும் ஒப்புக்கொண்டு அவரிடம் சிவதீட்சை பெற்று ஊர்திரும்பி சிவனருளால் மீண்டும் செல்வச்செழிப்புடன் வாழ்ந்தனர். அதுமுதல் அவர்கள் அகோரசிவரையே தமது குலகுருவாகக் கொண்டனர். இவ்வரலாறு 'இளையாற்றகுடிமான்மியத்தில்' காணப் படுகிறது.

கிமு. 585-ல் பூவந்திச்சோழன் என்பவன் தங்கள் குலப் பெண்களைச் சிறையெடுத்ததனால் எண்ணூயிரம் குடும்பத் தினரும் தங்கள் பிள்ளைகளை குருவிடம் ஒப்படைத்துவிட்டு உயிர் நீத்தனர். குருநாதரும் ஆத்மநாதசாஸ்திரி என்பவர் மூலம் அவர்களை வளர்த்து கல்வி கேல்விகளில் சிறப்புறச் செய்து ஆதரித்தார். பின்னர் கி மு. 594-ல் சோழமன்னன் தனது மகன் ராஜபூஷணனுக்கு முடிசூட்ட விரும்பி வழக்கம் போல் நகரத்தார்களை அழைத்து முடிசூட்டுமாறு வேண்டி

னான் அதற்கு அவர்கள் பிரம்மச்சாரிகளான நாங்கள் முடி சூட்டலாகாது. எங்கள் குலத்திலோ பெண்களே இல்லை. என்ன செய்வது என்றார்கள். அரசன் அவர்களுடைய குருவாகிய அகோர சிவரையும் மற்ற பெரியோர்களையும் அழைத்துக் கேட்ட பொழுது அவர்கள் இதுபோன்ற சமயங்களில் வைசியர்கள் வேளாளர் குலத்தில் பெண்ணெடுக்கலாம் என்று கூறினார்கள் வேளாளர்களை அழைத்துக் கேட்ட பொழுது அவர்கள் எங்கள் குருமார்களே எங்கள் பெண்களுக்கு குருவாக இருப்பதானால் சம்மதம் என்று கூறவே அனைவரும் சம்மதித்து திருமணம் நடந்தது.

## பாண்டியநாடு வருகை

சோழநாடு சென்றிருந்த சௌந்தரபாண்டியமன்னன் சோழமன்னனிடம் தனது நாட்டில் திருப்பூவணம் வரை கடல் கொண்டு ஊர்கள் அழிந்துவிட்டபடியால் குடிகள் இல்லாமலிருந்து இப்பொழுது நற்குடிகள் வரவழைக்கப்பெற்றுசெழிப்பாக இருப்பதாகவும் மேலும் சில நற்குடிகளும் வியாபார வைசியர்களும் கொடுக்க வேண்டும் என்று கேட்க, சோழமன்னன் நகரத்தார்களை அழைத்துக் கேட்டான் அவர்கள் நாங்கள் மூன்று தெருவாரும் சேர்க்கையாகக் குடியிருக்க இடமும் தேவாலயமும் நாங்கள் உடன் அழைத்து வரும் குருமார்களுக்கு மடாலயமும் மானியங்களும் கொடுப்பதுடன் தாங்கள் நடத்துவதுபோல் மரியாதையுடன் நடத்துவதானால் செல்கிறோம் என்றார்கள் பாண்டியனும் அவ்வாறே சம்மதிக்க நகரத்தார்கள் அங்கிருந்து புறப்பட்டு ஆண்கள்குரு அகோர-சிவாச்சாரியாரையும் பெண்கள் குரு நிரம்பவழகிய தேசிகரையும் உடன் அழைத்துக்கொண்டு கி.பி. 707-ல் பாண்டியநாடு வந்து சேர்ந்தார்கள்.

### குருமடங்களின் தோற்றம்

பாண்டியநாடு வந்த அகோரசிவாச்சிரியார் தமக்கு வயதாகிவிட்டபடியால் தாம் சிதம்பரத்தில் சிவதவமியற்ற விரும்புவதாகவும் தமது நண்பரும் பாண்டிய மன்னனின் குருவுமாகிய ஈசான சிவாச்சாரியாரிடம் தீட்சை பெற்றுக் கொள்ளுமாறும் கூறித் திருமுகமளித்துவிட்டுச் சிதம்பரம் சென்றுவிட்டார். எனவே பாணடியமன்னன் ஈசானசிவாச்சாரி யாருக்கு கிளாமடம் முதலிய ஐந்து கிராமங்களையும் நிரம்ப வழகிய தேசிகருக்கு துளாவூர் முதலிய கிராமங்களேயும் அளித்து மடம் ஏற்படுத்திக் கொடுத்தான். அதுமுதல் நகரத்தார் ஆண்களுக்கு நெற்குப்பை அருகிலுள்ள கிளாமட மும் பெண்களுக்குக் குன்றக்குடிக்கருகிலுள்ள துளாவூரும் குருபீடங்களாக அமைந்தன.

### பாதரக்குடி மடம் தோற்றம்

சிலகாலத்துக்குப்பின் காசியாத்திரை சென்ற கிளாமடம் சுவாமிகள் நீண்ட நாள்திரும்பிவராதபடியால் நகரத்தார்களில் சிலர் திருப்புனல் வாயிலிலிருந்த இராமநாதசுவாமி அய்யரிடம் தீட்சை பெற்றனர். அதன்பிறகு காசி சென்றிருந்த சுவாமிகள் திரும்பி வந்துவிடவே நகரத்தார்கள் அவரிடம் சென்று நடந்ததைக் கூறினர். அதைக்கேட்ட சுவாமிகளும் உங்களில் எத்தனேபேர் அவரிடத்தில் தீட்சை பெற்றீர்களோ அத்தனேபேரும் வமிசபரம்பரையாக அவரிடமே தீட்சை பெற்றுக்கொள்ளுங்கள் என்று கூறி அனுமதியளித்து கி.பி.1566ல் இராமநாதசுவாமிக்கு பாதரக்குடியில் மடாலய மும் மானியமும் விட்டுக்கொடுத்தார்.

### பழனிக்காவடியும் குருபீடமும்

கி பி 1600 வாகில் நகரத்தார்சிலர் கலாமடம் சுவாமிகளே தரிசித்து தமது தொழில் மந்தமாக இருப்பதாகக்

கூறினார்கள். அதற்கு சுவாமிகள் உப்புஎடுத்துக் கொண்டு பழனியை நோக்கிச்சென்று வியாபாரம் செய்யும்படி கூறினார் நகரத்தார்களும் அவ்வாறே செய்ய அப்பொழுது பழனிப் பகுதியில் அடைமழை பெய்து உப்புமூட்டைகளெல்லாம் கறைந்து உப்பே இல்லாமலிருந்ததால் இவர்களுக்கு நல்ல லாபம் கிடைத்து விபரத்தை சுவாகளிடம் வந்து தெரிவிக்கவே அதற்கு அவரும் தொடர்ந்து அப்பகுதியிலேயே வியாபாரம் செய்யும்படியும் இலாபத்தில் அரைக்கால்பங்கு மகமை எடுத்துவைத்து தைபூசத்தன்று பழனியில் சன்னியாசிகளுக்கு அன்னதானம் செய்யும்படியும் கூறினுர். அவர்களும் அவ்வாறே செய்து வர நான்காண்டுகளில் இலாபம் பெறுகி மகமையும் அதிகம் சேர்ந்தது, நகரத்தார்கள் இதை சுவாமி களிடம் தெரிவிக்கவே, சுவாமிகளும் அவர்களுடன் சென்று அன்னதான நிகழ்ச்சியில் கலந்து கொண்டார். அப்பொழுது அவர் அடுத்த ஆண்டு வரும்பொழுது காவடிகட்டி எடுத்து வரவேண்டும் என்று கூறினுர். அவ்வாறே அடுத்த ஆண்டு மூதன் மூதலில் கலாமடத்தில் வைத்து சர்க்கரைக்காவடி கட்டிப் புறப்பட்டார்கள் இவர்கள் வருவதையறிந்த பழனி ஜமீன்தார் சின்னானப்ப நாயக்கரும் ராஜமரியாதைகளுடன் சுவாமிகளேயும், காவடியையும் வரவேற்று தரிசனம் செய்து வைத்தார் இவ்வாறு பதினைந்து ஆண்டுகள் வரை சுவாமிகள் தலைமையிலேயே வரலாற்றுப்புகழ் மிக்க நகரத்தார் பழனிக் காவடிப் பயணம் நடைபெற்றது. சுவாமிகளின் கனவில் முருகப் பெருமான் வந்து கூறியபடி திருப்பணிகள் செய்திருக் கிருர்கள், விபூதிக்காசில் கால்பங்கு அன்னதான மடத்துக்கு நிதியளித்திருக்கிருர்கள். அன்னதான மடத்திலும் ஷண்முக நதிக்கரையிலும் கலாமடம் சுவாமிகளின் உருவச்சிலை இருக் கிறது. இன்றும் பழனியாண்டவர் சன்னதியில் நகரத்தார் காளஞ்சி மரியாதைகளில் கலாமடம் ஆதினத்துக்கே முதல் மரியாதை அளிக்கப்படுகிறது.

**சேனாபதி சுவாமிகள்**

பாதரக்குடி மடம் சேனுபதி சுவாமிகள் குன்றக்குடி முருகப் பெருமானுக்கு வெள்ளிமயில் வாகனம் செய்து வைத்துள்ளார். இன்றும் அங்கு பங்குனி உத்திரத் திருவிழாவில் முதல் மரியாதை பாதரக்குடி ஆதினத்துக்கே சேனுபதி சுவாமிகள் மீது கோவிலூர் ஆண்டவரும் பாடுவார் மூத்தப் பய்யாவும் பாடல்கள் பாடியுள்ளனர்.

இவ்வாறு நகரத்தார் வரலாற்றுடன் இரண்டறக் கலந்துவிட்ட குருபீடம் இப்பொழுது 1975 முதல் கலாமடம் பாதரக்குடி இரண்டும் ஒன்றுபடுத்தப்பட்டு கோவிலூருக்கு அருகிலுள்ள பாதரக்குடியிலும் பெண்கள் குருபீடம் குன்றக்குடிக்கருகிலுள்ள துளாவூரிலும் இயங்கி வருகின்றன.

# உபதேசத்தின் பெருமை

இதுவரை கூறிய வரலாறுகளிலிருந்து நகரத்தார்கள் தங்கள் குருபீடங்களையும் உபதேசம் எனப்படும் சமயதீட்சையையும் எவ்வளவு முக்கியமாகக் கருதி வந்திருக்கிருர்கள் என்பது நன்கு தெரியவரும். ஐம்பதாண்டுகளுக்கு முன் ஒரு நாள். நாகைத்துறைமுகத்திலிருந்து கப்பல் ஒன்று பர்மாவுக்குப் புறப்பட ஆயத்தமாகிக் கொண்டிருந்தது. நகரத்தார் காரியஸ்தர் ஒருவர் கையில் ஒரு கவருடன் துறைமுக அலுவலகத்துள் நுழைந்து தலைமை அதிகாரியைச் சந்தித்து அவரிடம் கவரை நீட்டினார். அதை வாங்கிப் பிரித்துப்படித்த அதிகாரியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. காரணம் அது கப்பல் புறப்படுவதை இரண்டுநாள் நிறுத்தி வைக்கும்படி கோரும் கோர்ட் தடையுத்தரவு. இது எதனல் தெரியுமா? அப்பொழுது கீழப்பூங்குடியில் நகரத்தார்கள் உபதேசத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். உபதேசம் கேட்க வேண்டிய சிலர் அந்தக் கப்பலில் செல்லவேண்டி

30/3

யிருந்தது. எனவே நகரத்தார்கள் உபதேசத்துக்காகக் கப்பல் புறப்படுவதையே தடுத்து நிறுத்திவிட்டார்களாம்!

### சம்பளச் சீட்டில் உபதேசம்

அயல்நாடு செல்லும் நகரத்தார்களுக்கு சம்பளச்சீட்டு என்று ஒன்று எழுதுவார்கள். அதில் ''உபதேசசமுத்தி வைத்தால் முதலாளி செலவில் வந்து போகிறது'' என்று எழுதுவார்களாம்.

### உபதேசக் கொட்டகை

தேவகோட்டை நகரச் சிவன்கோவிலில் மகாமந்திரோப தேசக்கொட்டகை என்று ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அது பாதரக்குடி சுவாமிகளை அழைத்து வந்து உபதேசம் கேட்பதற்காக் கட்டப்பட்டதாம் அப்படியானால் அந்த உபதேசம் எவ்வளவு சிறப்பாக நடைபெற்றிருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்.

### உபதேசப்புதுமை

முன்பெல்லாம் உபதேசம் கேட்பதை ''உபதேசப் புதுமை'' என்றே வழங்கி வந்தனர். பழைய கணக்குகளை எடுத்துப்பார்த்தால் இதற்காக கௌரிசங்கம், பட்டு வாங்கியது காய்ச்சி ஊற்றியது மொய் எழுதியது முதலிய செலவுகள் இருப்பதைக் காணலாம். இவ்வாறு முன்னாளில் நகரத்தார்கள் சிறப்பாகப் போற்றி வந்திருக்கும் உபதேசத் தைப் பற்றி நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமா? அன்பு கூர்ந்து மேலே படியுங்கள்.

## உபதேசத்தின் அவசியம்

உபதேசம் என்றவுடன் சிலர் இது ஏதோ ஞானோபதேசம் உலகத்தைத் துறந்தவர்களுக்கு உரியது. நமக்கு அதற் கெல்லாம் பக்குவம் வரவில்லை. வயதான காலத்தில் வேண்டுமானால் பார்த்துக் கொள்ளலாம், என்று நினைக்

கிறார்கள். அது சரியல்ல. இது பக்குவம் வந்தபிறகு செய்யும் ஞானோபதேசமல்ல பக்குவம் உண்டாவதற்காகச் செய்யப் படும் மந்திர உபதேசம் தான்.

மனிதன் இயல்பாக நல்வழியில் செல்ல வேண்டும் என்றே விரும்புகிறான். மேல்நிலையை அடையவேண்டும் என்றே ஆசைப்படுகிறான். தீவினைகளைச் செய்து நரகத்துக்குச் செல்லவேண்டும் என்று யாரும் விரும்புவதில்லை இருப் பினும் ஏதோ ஒரு சக்தி தீயவழியிலேயே மனிதனைச் செலுத்த முயல்கிறது. இது எல்லா மதத்துக்கும் பொதுவான தத்துவப் பிரச்சினை. கிறித்தவர்கள் 'இதைத்தான் சாத்தான் என் கிறார்கள். அவர்கள் அதை இறைவனுக்கும் கட்டுப்படாத சக்தியாக வருணிக்கிறார்கள். நமது மதம் அப்படியல்ல. இறையருளால் நீங்கக்கூடிய ஒரு சக்தியாக வருணிக்கிறது. சைவசித்தாந்தம் இச்சக்தியை மலம் அதாவது அழுக்கு என்று கூறுகிறது.

## மும்மலங்கள்

தாமிரமும் தங்கமும் ஒரே மூலக்கூறுகளாலானவை இருப்பினும் தாமிரத்தில் களிம்பு இருக்கிறது. அதனால் அது கருப்பாகிறது. அதுபோல் சீவனும் சிவனுடைய அம்சமே யாயினும் சீவனிடம் ஆணவம், கர்மம், மாயை என்று மூன்று மலங்கள் இருக்கின்றன. சில மூலிகைகளுடன் சேர்த்துத் தாமிரத்தை புடம் போட்டால் களிம்பு தனியே பிரிந்துவிடும் தாமிரம் தங்கமாகிவிடும். நம்நாட்டில் முற்காலத்தில் ரச வாதிகள் இதை சர்வசாதாரணமாகச், செய்திருக்கிறார்கள். அதுபோல் நல்லகுருவானவர் ஆர்வமுள்ள சீடனுக்கு சாத்திர முறைப்படி தீட்சை செய்யும்பொழுது சிவபெருமான் குருவின் உடலில் அதிஷ்டித்து நின்று சீடனுக்கு மலநீக்கம் செய்தருள் வார் என்று சிவஞானபோதம் முதலிய நூல்கள் கூறுகின்றன.

**தீட்சை என்றால் என்ன?**

மும்மலங்களில் கட்டுண்டிருக்கும் சீவன் மயக்க நிலையிலேயே இருக்கிறது. இதனால்தான் மனிதன் மனத்தின் அடிமையாகவே இருக்கிறான். குருவானவர் தனது மந்திர சக்தியால் சீடனுக்கு விழிப்புணர்ச்சி ஏற்படுத்தினால்தான் ஆன்மீகத்தில் வீறுகொண்டு முன்னேறுவது சாத்தியமாகும். இதுவே தீட்சையின் தத்துவமாகும்.

''தீயதே ஞான சத்பாவம் : க்ஷீயதேச மலத்ரயம்

தானக்ஷபண ஹேதுத்வாத் தீக்ஷா இத்யபிதீயதே'' என்று அகோர சிவாச்சாரியார் சமயதீக்ஷாவிதி கூறுகிறது. அதாவது தீட்சை என்ற சொல்லில் அளித்தல் அழித்தல் ஆகிய இரு பகுதிகள் உள்ளன. மெய்யறிவையும் நல்லுணர்வையும் அளிப்பதாலும் மும்மலங்களை அழிப்பதாலும் இதற்கு தீட்சை என்று பெயர் என்பது அதன் பொருள். எனவே பக்குவம் உண்டாக்குவதற்காக ஏற்பட்டதே தீட்சையாகும்.

**தீட்சையின் வகைகள்**

சமயம், விசேஷம், நிருவாணம் ஆச்சாரிய அபிஷேகம் என்று தீட்சையில் நான்கு வகை இருக்கிறது. இதில் சமய தீட்சையே உபதேசமாகும். சிவபூஜை எடுத்துக்கொள்வது விசேஷதீட்சை நிர்வாணதீட்சை யோகப்பயிற்சிக்கும் ஆச்சாரிய அபிஷேகம் பிறருக்கு தீட்சை செய்வித்தல், கோவில்பூஜை, கும்பாபிஷேகம் முதலியவை செய்தல் முதலியவற்றுக்கும் உரியது எனவே சமயதீட்சை என்னும் உபதேசம் மற்றதீட்சைகளுக்கு அடிப்படையானதும் எளிமையானதுமாகும். சிவதரிசனம் செய்வதற்குக் கூட பஞ்சாட்சர உபதேசம் பெற்றிருக்கவேண்டும் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. பிரகாரம் வலம் வரும்பொழுது திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டே வலம் வரவேண்டும் ஊர்க்கதை

பேசிக்கொண்டு வலம் வரக்கூடாது. அதுபோல் கொடிமரத் தருகே அமர்ந்து பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபம் செய்தால் தான் சிவதரிசனத்தின் பலன் கிடைக்கும்.

### பிறமதங்களில் தீட்சை

தொழில் துவங்க வேண்டுமானால் முதலில் லைசன்ஸ் பெறவேண்டும். அதுபோல் சமய உலகில் நுழைய விரும்பு பவர்கள் சாத்திரமுறைப்படி தம்மைப் பதிவுசெய்துகொள்ளும் முறையே தீட்சையாகும். எல்லாமதத்திலும் தீட்சை இருக்கிறது. பிறப்பினால் மட்டும் ஒரு மதத்துக்கு உரியவனாக எந்த மதமும் ஏற்றுக் கொள்வதில்லை. கிறித்தவர்கள் ஞானஸ்னானம் என்கிறார்கள் மகமதியர்கள் தொழுகை எடுத்துக்கொள்கிறார்கள் அதுபோல் இந்துமதத்திலுள்ள பதிவு முறையே உபதேசமாகும்.

### உபநயனமும் உபதேசமும்

ஒரு வித்தியாசம் என்னவென்றால் இந்துமதத்தில் பல பிரிவுகள் இருப்பதால் தீட்சையும் வெவ்வேறு பெயரிலும் வடிவத்திலும் இருக்கிறது. பிராமணர்கள், ஆரியவைசியர் கள், முதலியோர் உபநயனம் என்ற பூணூல் கல்யாணம் செய்து கொண்டு சந்தியா வந்தனம் செய்கிறார்கள். வைண வர்கள் முத்திராதானம் செய்து கொள்கிறார்கள். அதுபோல் சைவசமயத்தில் நாள்வழிபாடு தொடங்கும் நிகழ்ச்சியே உபதேசமாகும். பிராமணர்கள் பூணூல் அணிந்து காயத்ரி மந்திர உபதேசம் பெற்ற பின்பே வேதம் ஓத முடியும் பூஜை மற்ற சமயச்சடங்குகள் செய்ய முடியும். ''சந்தியாவந்தனம் செய்யாதவன் தூய்மையற்றவன் எவ்விதச் சமயச் சடங்கும் செய்ய அருகதையற்றவன் (மனுஸ்மிருதி 4–90) என்று கூறப்படுகிறது. அதுபோல் ஆகம சம்பந்தமான எந்தவொரு செயலையும் செய்வதற்கு உபதேசம் பெற்றிருக்கவேண்டும்.

### சாந்தியும் உபதேசமும்

எனவேதான் சாந்திக்கு முன் கட்டாயம் உபதேசம் கேட்கவேண்டும் என்று கூறுகிறார்கள். ஏனென்றால் அது ஒன்றுதான் இப்பொழுது வழக்கத்தில் இருக்கும் வைதீக காரியம் உண்மையில் சாந்திக்கு மட்டுமல்ல எந்தஒரு வைதீக காரியத்துக்குமே உபதேசம் அவசியம். முக்கியமாக உபதேசம் கேட்டவர்களுக்கு மட்டுமே கிரியை செய்வார்கள். பெற்றோர்களுக்கு கிரியை திதி முதலியவை செய்வதற்கும் உபதேசம் பெற்றிருக்கவேண்டும எனவே வயதானவர்கள் தாங்கள் உபதேசம் கேட்பதுடன் தங்கள் பிள்ளைகளையும் அவசியம் கேட்கச் செய்யவேண்டும்.

# அனுஷ்டானத்தின் பயன்கள்

### ஆயுள் வளரும்

உபதேசம் கேட்டு அனுஷ்டானம் செய்வதால் மறுமையில் மட்டுமின்றி இம்மையிலும் பல அரிய பயன்கள் கிட்டும் அவற்றுள் முதன்மையானது ஆயுள்.

மார்க்கண்டேயனுக்கு ஜாதகப்படி பதினாறு வயதுதான் ஆயுள். அவன் சிவபஞ்சாட்சரத்தை ஜெபம் செய்ததால் அவன்மீது எமன் பாசக்கயிற்றை வீசிய பொழுது சிவபெருமான் தோன்றி யமனை விரட்டினார். மார்க்கண்டேயனுக்கு சிரஞ்சீவிப் பட்டமளித்தார். ''துஞ்சலும் துஞ்சலிலாத போழ்திலும் நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும் வஞ்சகமற்றடி வாழ்த்த வந்த கூற்று அஞ்ச உதைத்தது அஞ்செழுத்துமே'' என்று ஞானசம்பந்தர் இதனைப் பாடுகிறார்.

அந்த மார்க்கண்டேய முனிவருக்கு தன்னுடைய ஆயுள் எவ்வளவு தான் நீடிக்கும் என்று தெரிந்துகொள்ள ஆசை ஏற்பட்டதாம். அவர் பிரம்மதேவனிடம் சென்ருர். அவர் நான் உனக்குக் கொடுத்தது பதினறு ஆண்டுகள் தான். அதை மாற்றி சிவபெருமான் வரம் கொடுத்திருக்கிருர். எனவே அது எவ்வளவு என்பது எனக்குத் தெரியாது எனது தந்தை மகாவிஷ்ணுவை வேண்டுமானால் கேட்டுப்பார் என்ருர். மகாவிஷ்ணுவோ சிவபெருமானிடமே சென்றுகேள் என்று கூறிவிட்டார்! எனவே முனிவர் கயிலை மலையை நோக்கிச் சென்ருர். செல்லும் வழியில் ஆதவன் மறையத் தொடங்கினன். முனிவர் சுற்றுமுற்றும் பார்த்தார் அங்கு ஒரு குட்டையில் சிறிதளவு நீர் இருந்தது. முனிவர் அங்கு சென்று சந்தியாவந்தனம் செய்தார். உடனே சூரிய பகவான் அவர் முன்தோன்றி ''முனிவரே உமது ஆயுளைப் பற்றித் தெரிந்துகொள்வதற்கு நீர் கயிலை செல்லவேண்டிய அவசியமில்லை. நீர் இந்த சந்தியாவந்தனத்தை விடாமல் செய்யும் வரை உமக்கு ஆயுள் வளரும் என்று கூறினார். ''முனிவர்கள் சந்தியாவந்தனம் செய்ததனல் தான் அவர்களுக்கு ஆயுள் பெருகியது'' (மனுஸ்மிருதி 4—94) என்று தருமசாத்திரங்கள் கூறுகின்றன. எனவே உபதேசம் கேட்டு அனுஷ்டானம் செய்வதால் ஆயுள் பெருகும்.

### நோய்கள் அணுகாது

ஒரே சொல்லை மீண்டும் மீண்டும் கூறுவதால் நமது உடலில் மின்சாரம் போன்ற ஒரு சக்தி உண்டாகிறதாம். இந்த சக்தியை அளப்பதற்கு இத்தாலி நாட்டில் ஒரு கருவி கூட கண்டுபிடித்திருக்கிருர்களாம். அமெரிக்காவில் உள்ள ஹார்வோர்ட் பல்கலைக்கழகத்தில் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிருர்கள். இதில் ஆச்சரியம் என்னவென்ருல் ''வண்டி வண்டி''என்று ஜெபம் செய்தால் மீட்டர் சக்தி காண்பதில்லையாம் அந்தச்சொல் சமயத்தொடர்புள்ளதாக இருக்கவேண்டும். ஒரு உயிரெழுத்து அவசியம் இருக்க

வேண்டும் இவ்வாறெல்லாம் ஆராய்ந்து கடைசியில் என்ன கண்டுபிடித்தார்கள் தெரியுமா? ''ஓம்'' என்று ஜெபம் செய்தால் மீட்டர் அதிக சக்தி காண்பிக்கிறதாம் ஓம் இந்து மத மந்திரம் அது கூடாது என்று சிலர் கூறினார்களாம். எனவே பேராசிரியர்கள் ஒன் என்று ஜெபம் செய்யலாம் என்று கூறினார்களாம் அதுவும் கிறிஸ்த்தவ மதத்தைச் சேர்ந்தது "God is one'' என்ற பைபிளில் கூறப்பட்டுள்ளது என்று சிலர் கூறினர்களாம். பேராசிரியர்கள் ஓம் என்றே சொல்லுங்கள் அதுதான் அதிகசக்தி காண்பிக்கிறது மந்திரங்கள் மதம் மொழி எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட தூயஒலிகள் என்று கூறினர்களாம் இந்த தூயஒலிகளைத்தான் நமது முனிவர்கள் தமது தெய்வீக சக்தியால் கண்டுபிடித்து மந்திரங்களாக நமக்குத் தந்திருக்கிறார்கள் இந்த மந்திரங்களை ஜெபிப்பதால் ஏற்படும் சக்தி நமக்கு நோய் வராமல் தடுக்கிறதாம். எனவே அமெரிக்கப் பல்கலைக்கழகங்களில் இப்பொழுது தியானத்தைக் கட்டாயப் பாடமாகச் சொல்லிக் கொடுக்கிறார்களாம். சிறிது நேரம் தியானம் செய்வதால் மனம் அமைதியடைகிறது. எண்ண அலைகளின் வீச்சுத்தூரம் குறைகிறது. ஆல்பா நிலையிலிருந்து பீட்டா நிலை ஏற்படுகிறது மனதுக்கும் உடலுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது இரத்தஓட்டம் நாடித்துடிப்பு சுவாசம் முதலிய இயக்கங்கள் சீரடைகின்றன. எனவே ஜெபம் செய்வதால் இரத்தஅழுத்தம் இதய நோய் முதலியவை வராமல் தடுக்கலாம் ஏற்கனவே வந்திருந்தாலும் விரைவில் நீக்கலாம். நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த அன்பர் ஒருவர் உபதேசம் கேட்டது முதல் மூலநோய் நீங்கி விட்டதாகக் கூறுகிறார். எனவே உபதேசம் கேட்பது ஆரோக்கியத்துக்கு மிகவும் உகந்தது.

### எண்ணியது நடக்கும்

ஜெபம் செய்வதால் நாம் எண்ணிய காரியங்கள் கை கூடும் எப்படியென்றால் நமது எண்ணத்துக்கு வலிமை

எற்றினல் அந்த எண்ணமே நமது காரியத்தை நிறைவேற்றி விடும் என்று மனேதத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர் 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர் திண்ணிய ராகப்பெறின்' என்று திருவள்ளுவரும் கூறுகிருர். ஜெபம் செய்வதால் மின்சாரம் போன்ற ஒரு சக்தி ஏற்படுகிறது என்று கூறினேமல்லவா? அது ஜட சக்தியல்ல. சித்சக்தி அறிவுசக்தி எனவே நாம் தியானம் செய்வதற்கு முன் எதைப் பற்றி ஆழ்ந்து நினைத்துக்கொண்டிருந்தோமோ அந்த எண்ணத்தை அந்த சக்தி நிறைவேற்றிக் கொடுத்துவிடுமாம். எனவே நமது கோரிக்கைகளை இறைவனிடம் கூறி நம்பிக்கை யுடன் ஆழ்ந்து பிரார்த்தனை செய்துவிட்டு ஒரே மனதுடன் ஜெபம் செய்தால் நமதுகோரிக்கைகள் நிச்சயம் நிறைவேறும்.

ஆனல் ஒரே ஒரு நிபந்தனை நமது கோரிக்கை நியாய மானதாக இருக்கவேண்டும். இல்லையேல் நமதுஅடிமனத்தின் நியாய உணர்வே மின்தடையாக (insulater) மாறி அந்த மின்னேட்டத்தைத் தடுத்து விடுமாம். நாரத முனிவர்ஸ்காந்த மகாபுராணத்தில் ''புக்தி முக்திப்ரதோ மந்த்ர: சங்கரஸ்ய மகாப்ரிய:'' பஞ்சாட்சர மந்திரம் இம்மை மறுமை ஆகிய எல்லா நலன்களையும் அளிக்கக்கூடியது. விருப்பியதை யெல்லாம் அளிக்கக்கூடிய காமதேனுவைப் போன்றது என்று கூறுகிருர்.

## உயிர்காக்கும் திருவைந்தெழுத்து

அமெரிக்காவைச் சேர்ந்த ''கர்ட்க்ருஜெர்'' என்பவர் பயணம் செய்துகொண்டிருந்த விமானத்தைக் கடத்தல் காரர்கள் கடத்திச்சென்றனர். உடனே கர்ட்க்ருஜெர் பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபம் செய்தாராம். சிவாய சுப்பிரமணியம் முயற்சியால் ஹவாய் முதலிய பகுதிகளில் சைவம் பெருகி வருகிறது. அடுத்த விமானநிலையத்தில்

பெட்ரோலுக்காக விமானத்தை இறக்கியபொழுது கடத்தல் காரர்கள் இவரை மட்டும் இறக்கிவிட்டு விட்டுச்சென்று விட்டார்களாம்.

கீழப்பூங்குடியைச்சேர்ந்த சுப்பையா செட்டியார் என்பவர் ஒருநாள் மாலை வெளியூர் சென்றுவிட்டுத் திரும்பி வரும் வழியில் கண்மாயில் அனுஷ்டானம் செய்துவிட்டுத் தனியாக வந்துகொண்டிருக்கும் பொழுது ஒருவழக்கு தொடர்பாக அவருடைய எதிரிகளின் தூண்டுதலால் முரடன் ஒருவன் அரிவாளை ஓங்கிக்கொண்டு அவரை வெட்ட வந்தான். அவர் உடனே பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபம் செய்தார். முரடன் அரிவாளைத்தாழ்த்தி வணங்கி விட்டுச் சென்று விட்டானும்! ''சிவாய நம எனச் சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு நாளுமில்லை'' என்று ஔவையார் பாடுகிருர்.

### தீயசக்திகள் அணுகாது

சிவபெருமான் பூத கணங்களின் தலைவர் எனவே பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபம் செய்தால் தீயசக்திகள் நம்மை அணுகாது. தீயசக்திகளை விரட்டுவதற்கான யந்திரங்களில் பஞ்சாட்சர மந்திரமே எழுதப்படுகிறது பஞ்சாட்ர ஜபம் செய்பவர்கள் வீட்டில் யாராவது ஏவல் முதலியவை வைத்தால் அது வேலை செய்யாது. என்று மந்திர நூல்கள் கூறுகின்றன. எனவே இது எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும் நம்மைக் காக்கும் ஒரு கவசமாகும்.

### தொழில் முன்னேறும்

பஜாஜ் நிறுவனத்தின் கருத்தரங்கில் கலந்து கொண்ட முன்னர் குறிப்பிட்ட கர்ட்குருஜெர் உங்கள் நிறுவனத்தில் பணிபுரியும் அனைவரும்கூடிதினமும் பத்து நிமிடங்கள் பஞ்சாட்சர ஜெபம் செய்துவந்தால் உங்கள் தொழில்

முன்னேறும் என்று கூறினர். அவர்களும் அவ்வாறே செய்ததில் அந்த நிறுவனத்தின் லாபம் அந்த ஆண்டு கணிசமாகப் பெருகியுள்ளதாம் ஆதாரம் 1985செப் ஞானபூமி.

இதன் அடிப்படை என்னவென்றால் நமக்கு எவ்வளவு தான் திறமை இருந்தாலும் எந்த ஒரு செயலையும் திறம்படச் செய்துமுடிக்க மனஓர்மை (concentration) வேண்டும். காரோட்டி ஒரே கவனத்துடன் காரை ஓட்டினால் தான் கார் ஒழுங்காக ஓடும் பல கவனத்துடன் ஓட்டினால் பல இடங்களுக்கும் சென்று விடும். துரியோதனன் அம்பு எய்வதற்குக் குறி வைத்தான். ''மரம் தெரிகிறதா? தெரிகிறது'' ''கிளை தெரிகிறதா?'' ''தெரிகிறது'' நீ வில்லைக் கீழேவை உன்னால் குருவியை அடிக்க முடியாது என்றார் துரோணர். அர்ச்சுனன் குறிவைத்தான் ''மரம் தெரிகிறதா? ''இல்லை'' ''கிளை தெரிகிறதா'' ''இல்லை'' ''குருவி தெரிகிறதா?'' ''இல்லை'' துரோணருக்கே ஆச்சரியம். ''என்னதான் தெரிகிறது?'' அதன்கழுத்து மட்டுமேதெரிகிறது.'' ''அடி'' அடித்தான். ஒரே அடியில் குருவி கீழே விழுந்தது. மாபெரும் கிரிக்கெட் வீரர்கள் கூட சிலமயம் ரன்னே எடுக்காமல் ''அவுட்'' ஆகிறார்கள். காரணம் என்ன? கவனக்குறைவு. சில மாணவர்கள் விழுந்து விழுந்து படிப்பார்கள் மார்க் மட்டும் குறைவாகவே வரும். ஞாபகசக்தி இல்லை என்று சொல்ல முடியாது சினிமாவைப்பற்றி கேளுங்கள் மிகச் சரியாக பதில்சொல்வார்கள். ஏனென்றால் அதில் 'கவனம் இருக்கிறது எனவே நினைவும் இருக்கிறது. படிப்பில் கவனம் இல்லை. எனவே நினைவும் இல்லை. எந்தச் செயலையும் திறம்பட செய்து முடிக்க கவனசக்தி மிகவும் அவசியம் அதை அதிகப்படுத்திக் கொள்வதற்கு தியானம் ஒன்றே சரியானவழி பயிற்சியால் எதையும் சாதிக்க முடியும். ஒரே மந்திரத்தை திரும்பத் திரும்பச் சொல்லியும் ஒரே தெய்வத்திருவுருவத்தை

திரும்பத்திருப்ப தியானம் செய்தும் மனதிற்கு நாம்அளிக்கும் பயிற்சி எந்தச் செயலையும் ஒரே கவனத்துடன் தொடர்ந்து செய்யும் திறனை வளர்க்கும். அது மட்டுமல்ல தியானம் செய்வதால் மூளைக்கு இரத்த ஓட்டம் அதிகமாவதால் மூளை சுறுசுறுப்படைகிறது. நினைவாற்றல் பெருகும். படிக்கும் மாணவர்கள் உபதேசம் கேட்டு ஜெபம் செய்தால் படிப்பு நன்றாக வரும். தொழில்காரர்கள் ஜெபம் செய்தால் தொழில் முன்னேறும். வேலை உயர்வு கிடைக்கும் வாழ்வில் எல்லா வெற்றியும் கைகூடும்.

பாவங்கள் நீங்கும்

மனிதன் இன்பத்தை விரும்புகிறானேதவிர இன்பத்துக்குக் காரணமான புண்ணியத்தைச் செய்வதில்லை. துன்பம் வருவதை விரும்புவதில்லை. ஆனால் துன்பத்துக்குக் காரணமான பாவத்தையே செய்ய விரும்புகிறானே என்று வால்மீகி முனிவர் இராமாயணத்தில் வருத்தப்படுகிறார். எனவே நமக்குத் துன்பங்கள் வராமலிருக்க வேண்டுமானால் தீய செயல்களைத் தவிர்க்க வேண்டும். இப்பொழுது நாம் நன்மையே செய்தாலும் முன்வினை காரணமாகத் துன்பம் வரக்கூடும் எனவே முன்வினைகளையும் அழிக்க வேண்டும்.

அதைவிட்டுவிட்டு துன்பம் விலகுவதற்காக நாம் செய்யும் முயற்சிகள்யாவும் தலைவலிக்கு மாத்திரை சாப்பிடுவதுபோல் தாற்காலிகமானவையே மாத்திரையிலுள்ள போதைப் பொருள் மூளைநரம்புகளை மரக்கச்செய்யும். இதனால் வலி நீங்குவதுபோல் தோன்றினாலும் சிறிது நேரத்தில் மீண்டும் வந்துவிடும் அல்லது தலைவலிபோய் திருகுவலியாகத் திரும்பிவரும். சளி, அஜீரணம், உஷ்ணம், கண்கோளாறு போன்ற அடிப்படை நோய்களைப் போக்கினால்தான் தலைவலி உண்மையாக நீங்கும். அதுபோல் பாவங்களைப் போக்கிக்கொள்ளாமல் நவக்கிரகம் சுற்றுவது போன்ற சாதாரண முறைகளால் துன்பங்கள் நீங்காது.

ஊழ்வினையை எப்படி மாற்றமுடியும் என்று கேட்கக் கூடாது. ஏனெனில் சைவசித்தாந்தத்தில் ஊழ்வினை தீவிரம் அதிதீவிரம், மந்தம், அதிமந்தம் என்று நான்காகப் பிரிக்கப் பட்டுள்ளது. இதில் ,அதிதீவிரமாக உள்ளவற்றைத் தவிர மற்றவற்றை சிவனருளால் மாற்றலாம். தீவிரத்தின் வலிமை யைக் குறைக்கலாம் மந்தம் அதிமந்தம் ஆகியவற்றை அடியோடு அழிக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது, தீவினை களை அழிப்பதற்கோ பஞ்சாட்சரம் ஜெபம் செய்வதே சிறந்தவழி பஞ்சாட்சரம் கங்கை நதியைப் போன்றது· விபூதி யமுனை நதியைப் போன்றது. உத்திராட்சம் சரஸ்வதி நதியைப்போன்றது என்று சிவமகாபுராணம் கூறுகிறது. எனவே விபூதிருத்திராட்சம் அணிந்து பஞ்சாட்சரத்தை ஜெபம் செய்தால் அலகாபாத் திரிவேணி சங்கமத்தில் நீராடிய பயன் கிடைக்கும். பாவங்கள் நீங்குவதால் துன்பங்கள் நீங்கும்.

சந்திரகாந்தன் என்பவன் எண்ணற்ற பாவங்களைச்செய்தவன் அவன் ஒருநாள் பரத்தையர் வீட்டுக்குச் சென்றபொழுது அவனுடைய பகைவர்கள் அவனை அடித்து இடுகாட்டில் எறிந்துவிட்டுச் சென்று விட்டனர். குற்றுயிராய்க் கிடந்த அவன் இலைச் சருகுகளின் ஓசைகேட்டு விழித்தான். அங்கு ஒரு பெண் நரி நின்றுகொண்டிருந்தது. எனவே அவன் 'சிவா' என்று அலறினன் (சிவா என்ருல் பெண்நரி என்று பொருள்) அப்பொழுதே அவனது உயிர் பிரிந்தது யமதூதர் அவனை பற்ற வந்தனர். ஆனல் சிவகணங்கள் அங்கு தோன்றி அவர் களை விரட்டி விட்டு அவனை சிவலோகத்துக்கு அழைத்துச் சென்றனர் என்று ஸ்கந்த மகாபுராணம் கூறுகிறது.

'சிவ' என்ற இரண்டே எழுத்தைத் தற்செயலாகக் கூறினல் கூட அது எல்லா வினைகளையும் சுட்டெரித்துவிடும் என்று பார்வதிதேவி கூறுவதாகக் காளிதாசர் கூறுகிருர்.

''சிவ சிவ' என்கிலர் தீவினையாளர். சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்'' என்கிருர் திருமூலர். பஞ்சாட்சரத்தின் இரண்டு எழுத்துக்கே இவ்வளவு பெருமை இருந்தால் முறைப்படி திருவஃைந்தெழுத்தை ஓதினுல் எவ்வளவு பயன்கிடைக்கும் என்பதை எண்ணிப்பாருங்கள். அதுமட்டுமல்ல ஜெபம் செய்வதனுல் பாவங்கள் நீங்குவதுடன் மீண்டும் பாவம் செய்யாமலிருக்கும் மனஉறுதி கிடைக்கும். பிற மதங்களில் கூறப்படுவது போல் பாவ மன்னிப்புக் கேட்டவுடன் பாவம் நீங்கிவிடும். மீண்டும் அதே பாவத்தைச் செய்யலாம் மீண்டும் பாவமன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம். பாவச் செயல்களை மனிதன் செய்யாமலிருக்கவே முடியாது என்று நமது மதம் கூறுவதில்லை. இதற்குமாருக ''பஸ்சாத் தாபோஹிஸர் வேஷாம் அகானும் நிஷ்க்ருதி: ஸ்ம்ருதா'' (மனுஸ் மிருதி) செய்த தவறுக்கு மனம் வருந்தி இனிமேல் தவறுசெய்வதில்லை என்று தீர்மானிக்க வேண்டும். அப்பொழுதுதான் பாவங்கள் மன்னிக்கப்படும். என்று நமது மதம் கூறுகிறது. எனவே தெரிந்தும் தெரியாமலும் நாம் செய்திருக்கக் கூடிய தீவினைகளுக்காக மனம் வருந்தி அவனுடைய திருமந்திரத்தை ஜெபம் செய்வோமானுல் இறைவன் நமது தீவினைகளைப் போக்குவதுடன் நமது உள்ளத்தில் தோன்ருத் துணையாக இருந்து நம்மை நல்வழிப்படுத்துவான். இதையே ''காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார் தம்மை நன்னெறிக் குய்ப்பது'' என்றும் ''எல்லாத் தீங்கையும் நீங்குவராதலால் நல்லார்நாமம நமச்சிவாயவே'' என்றும் ஞானசம்பந்தர் பெருமான் பாடுகிருர்.

## நாரதரும் பஞ்சாட்சரமும்

நாரதமுனிவர் ஒரு சமயம் திருமாலிடம் சென்று பஞ்சாட்சரத்தின் பெருமையைப் பற்றிக் கூறுமாறு கேட்டார்.

அதற்கு அவர் "அதோ அந்தக்காட்டில் ஒரு புலி இருக்கிறது. அதனிடம் சென்று பஞ்சாட்சரத்தைக் கூறி அதன் பயனைக் கூறுமாறுகேள்" என்றார். அவ்வாறே நாரதர் சென்று கேட்டதும் அந்தப்புலி உயிரை விட்டுவிட்டது. நாரதர் சிலகாலம் சென்று மீண்டும் நாராயணரிடம் சென்று கேட்டபொழுது அவர் "அதே காட்டில் ஒரு பசு இருக்கிறது. அதனிடம் சென்று கேள்" என்று கூறினார். அவ்வாறே சென்று கேட்ட பொழுது அந்தப் பசுவும் இறந்துவிட்டது நாரதர் மீண்டும் மகாவிஷ்ணுவிடம் சென்று கேட்டார். அதற்கு அவர் "காசிமாநகரத்தில் பட்டத்தரசிக்கு நாளை ஒரு ஆண் குழந்தை பிறக்கும் அதனிடம் சென்று கேள். அது கூறும்" என்று சொன்னார். நாரதருக்கு என்ன ஆகுமோ என்று பயம். இம்முறை முன்னெச்சரிக்கையாக பஞ்சாட்சரத்தைக் கூறாமல் அதன் பெயரை மட்டும் கூறி அதன் பெருமையைப் பற்றிக் கூறுமாறு அந்தக்குழந்தையிடம் கேட்டார். அதற்கு அந்தக்குழந்தை "முனிவரே நான் காட்டில் ஒரு கொடும் புலியாக இருந்தேன். நீங்கள் என்னிடம் வந்து ஏதோ ஒரு மந்திரத்தைக் கூறினீர்கள். அதைக் கேட்டதுமே என்னுடைய புலிப்பிறவி நீங்கிவிட்டது. நான் அதே காட்டில் ஒரு பசுவாகப் பிறந்தேன். நீங்கள் மீண்டும் என்னிடம் வந்து அதே மந்திரத்தைச் சொன்னீர்கள். பசுப்பிறவியும் நீங்கிவிட்டது. இருமுறை அந்த மந்திரத்தைக் காதால் கேட்டதன் பயனாக நான் அரசகுமாரனாகப் பிறந்திருக்கிறேன். இதை விட இந்த மந்திரத்தின் பெருமைக்கு வேறு என்ன சான்று வேண்டும்? தயவு செய்து அந்த மந்திரத்தை எனக்கு உபதேசித்தருள வேண்டும்" என்று கூறியது. முனிவருக்கு பயம். பிறகு வந்து உபதேசம் செய்கிறேன் என்று கூறிவிட்டு வந்து விட்டார். இருமுறை காதால் கேட்டதற்கே இவ்வளவு புண்ணியம் என்றால் முறைப்படி ஜெபம் செய்தால் எவ்வளவு புண்ணியம் கிடைக்கும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

# இயன்றஅளவு செய்தால்போதும்

உபதேசம் கேட்டால் சரிவர அனுஷ்டானம் செய்ய வேண்டும்செய்யாவிட்டால் பாவம் என்று சில வயதானவர்கள் கூறி வருகிறார்கள். இதன் காரணமாகவே பலர் உபதேசம் கேட்காமலிருக்கிறார்கள் இது தவறான கருத்தாகும். செய்த வரை புண்ணியம் உண்டு என்றுதான் சாத்திரங்கள் கூறு கின்றனவே தவிர செய்யாவிட்டால் பாவம் என்று கூறப் படவே இல்லை, மேலும் அனுஷ்டானம் செய்யாமலிருப்பது என்பது ''அபாவம்'' இன்மைப்பொருள் 'பாவம்' என்பது உண்மைப்பொருள் இன்மையிலிருந்து உண்மை உண்டாகாது என்பது சைவசித்தாந்தத்தின் உயிர்நாடியான சத்காரியவாத மாகும் எனவே செய்யாவிட்டால் பாவம் என்பது சத்காரிய வாதத்துக்கு முரண்பாடாகும். அது மட்டுமல்ல.

செய்யாவிட்டால் பாவம் என்றால் செய்வதற்குப் புண்ணியம் கிடையாது என்றாகும். உதாரணமாக ஒருவர் தாம் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்தாவிட்டால் குற்றம் என்னும்பொழுது அவர் செலுத்தும் தொகையைத் திரும்பப் பெறவோ அதற்கு வட்டி கேட்கவோ முடியாதல்லவா? அதுபோல் செய்யாவிட்டால் குற்றம் என்றால் செய்வதனால் அந்தக்குற்றம் வராமலிருக்குமே தவிர செய்வதற்குத் தனியாக பயன் கிடையாது என்று ஆகும். அதை ஒப்புக்கொள்ள முடியாது பஞ்சாட்சரத்தைக்காதால் கேட்டாலே புண்ணியம் உண்டு என்று சாத்திரங்கள் கூறும் பொழுது செய்யும் ஜெபத் துக்குப் புண்ணியம்கிடையாது என்றால் சாத்திரங்கள் புராணங் கள் அனைத்தும் அர்த்தமற்றதாகிவிடும். எனவே செய்வதற்குப் புண்ணியம் உண்டு என்றே ஒப்புக் கொள்ளவேண்டும். செய்வதற்குப் புண்ணியம் உண்டு என்றால் செய்யாவிட்டால் பாவமில்லை என்றாகும், எப்படியெனில் ரெக்கரிங், LIC

முதலிய சேமிப்பு டெபாசிட்டுகள் போடுகிறோம் ப்ரீமியம் கட்டினால் அதற்குரிய அசல் வட்டித் தொகைகள் திரும்பக் கிடைக்கும் கட்டமுடியாவிட்டால் குற்றம் எதுவும் இல்லை கட்டியதொகையும் அதற்குரிய வட்டியும் திரும்பக்கிடைக்கும் அதுபோல், செய்தால் புண்ணியம் உண்டு என்றால் செய்யா விட்டால் பாவமில்லை என்றேவரும். செய்தாலும் புண்ணியம் உண்டு. செய்யாவிட்டாலும் பாவம் என்பது தருக்க நெறிக்குப் பொருந்தாது.

அப்படியே பாவம் என்று ஒப்புக்கொண்டாலும்கூட மீண்டும் ஜெபம் செய்யும்பொழுது அந்தப்பாவம் நீங்கிவிடும். ஜெபம் எல்லாப்பாவங்களையும் போக்கக்கூடியது என்னும் பொழுது அது இந்தப்பாவத்தையும் போக்கிடுமல்லவா? இதைக் கதகரேணு நியாயம்' என்று கூறுவார்கள். தண்ணீர் கலங்கலாக இருந்தால் அதைத் தெளிவிப்பதற்கு தேத்தாங் கொட்டையை அரைத்து விடுவார்கள். தேத்தாங்கொட்டை ஒரு அழுக்குத்தான். இருப்பினும் அது மற்ற அழுக்குக்களை நீக்கும் பொழுதுதானும் நீங்கிவிடுகிறது. அதை நீக்குவதற்கு வேறொரு பொருள் தேவைப்பட்டால் 'அனவஸ்தை' என்ற தோஷம் ஏற்படும் அதாவது அதை நீக்குவதற்கு இன்னொரு பொருள். பிறகு அதை நீக்குவதற்கு வேறொரு பொருள் என்று நீண்டு கொண்டே போகும். எனவே எல்லா தோஷங்களையும் போக்கக் கூடிய பஞ்சாட்சரம் தன்னால் ஏற்படக்கூடிய தோஷத்தையும் போக்கிவிடும்.

மருத்துவர் மருந்துகொடுக்கும்பொழுது தவறாமல் மருந்து சாப்பிடவேண்டும் என்றுதான் கூறுவார். 'நான் மருந்து சாப்பிட மறந்துவிடுவேன். சாப்பிட்டால் தவறாமல் சாப்பிடவேண்டும் இல்லாவிட்டால் மருந்து சாப்பிடாமலே இருக்கவேண்டும் என்று கூறலாமா? சில வேளைகளில்

குளிக்க முடியாமல் போய்விடுகிறது. அதற்காகக் குளித்தால் தவருமல் குளிக்கவேண்டும் இல்லாவிட்டால் குளிக்காமலே இருக்க வேண்டும் என்று யாராவது இருக்கிருேமோ? சில வேளைகளில்சாப்பிடமுடிவதில்லை. இதற்காகச் சாப்பிடாமலே இருக்கிருேமா?

இடையூறுநேரும் என்பதற்காகவே ஒரு செயலைத் தொடங்காமலிருப்பவன் மட்டரகமானவன். தொடங்கிவிட்டு இடையூறுவரும்பொழுது இடையில் நிறுத்திவிடுபவன் நடுத்தரமானவன். எத்தனை இடையூறு வந்தாலும் விடா முயற்சியுடன் எண்ணிய செயலைச் செய்து முடிப்பவனே உயர்தரமானவன் என்று பர்த்ருஹரி தமது நீதிசதகத்தில் கூறுகிருர். எனவே நாம் உயர்தரமானவர்களாக இருக்க வேண்டும். அல்லது நடுத்தரமானவர்களாகவாவது இருக்க வேண்டும். கடைத்தரமானவர்களாகி விடக்கூடாது.

அது மட்டுமல்ல. அனுஷ்ட்டான விதிகளிலேயே சந்தியா காலம் தவறிவிட்டால் சம்ஹிதா மந்திரத்தை ஒரு முறை ஜெபம் செய்தால் போதும் எனறு கூறப்பட்டிருக்கிறது. பிராயச்சித்த அர்க்கியம் ஒன்று இருக்கிறது. நமது மடத்தில் அனுஷ்டானத்துடனேயே அதனைச் சேர்த்திருக்கிருர்கள். திட்சாவிதிகளில் பிராயச்சித்தஹோமம் ஒன்று இருக்கிறது. அதனைச் செய்தபிறகே உபதேசம் செய்வோம். எனவே எந்த தோஷமும் ஏற்பட வாய்ப்பில்லை.

மேலும் ''நித்தத்துஎலும் அதிகாரம் இயற்றி'' என்று சிவஞானசித்தியில் கூறப்படுகிறது. தீக்ஷா விதியிலும் ''ஸ்த்ரீபாலரோகிவ்ருத்தானாம் யதாசக்தி ததீத'' பெண்கள் குழந்தைகள், நோயாளிகள், வயதானர்வகள் போன்றவர்கள் இயன்ற அளவு அனுஷ்டானம் செய்தால் போதும் என்று

கூறப்பட்டுள்ளது சக்தியிருந்தும் அலட்சியத்தால் செய்யாமலிருந்தால்தான் தவறு. சக்தி குறைவாக இருக்கும் பொழுது சக்திக்குத் தகுந்தவாறு செய்வதில் தவறில்லை. அடியோடு செய்யாமல் இருப்பதுதான் அதாவது உபதேசம் கேட்காமலிருப்பது தான் தவறு.

அனுஷ்டானம் செய்வதற்கு சுமார் பத்து நிமிடங்களே பிடிக்கும். இருபத்துநான்கு மணிநேரமும் உலக வாழ்க்கைக்கு செலவிடும் நாம் அருள் வாழ்க்கைகாக இந்தச்சிறு நேரத்தைக் கூட ஒதுக்கக்கூடாதா? சீட்டுவிளையாட, சினிமா பார்க்க வம்புபேச எல்லாவற்றுக்கும் நேரமிருக்கும் பொழுது இதற்கு மட்டும் எப்படி நேரமில்லாமல் போய்விடும்? பட்டியல் போட்டுப்பாருங்கள். எவ்வளவு நேரத்தை வீணாக்குகிறீர்கள் என்பது தெரியும். தண்ணீரில் இறங்கிக் குளிக்கலாம் நீச்சலடிக்கலாம் அதனுள்ளேயே முழுகிவிடக் கூடாது. அது போல் அருள்வாழ்வை மறந்து உலக வாழ்விலேயே மூழ்கி விடக்கூடாது. அரைமணிநேரம் முன்னதாகத் தூங்கி எழுந்தாலோ அல்லது அரைமணிநேரம் தாமதமாகத் தூங்கினாலோ கூட இந்த நேரத்தை ஈடுசெய்துவிட முடியும். அப்படியும் நேரமில்லாத போதும்இதை எந்த நேரத்திலும் இடத்திலும் ஜெபிக்கலாம் உட்கார்ந்து ஜெபம் செய்ய முடியாவிட்டாலும் நின்று கொண்டிருக்கும் பொழுதோ நடக்கும் போதோ வாகனங்களில் செல்லும் போதோ கூட ஜெபித்துக் கொண்டே இருக்கலாம். உரு ஏறத்திருஏறும்.

நடமாடும் தெய்வம் என்று போற்றப்படும் காஞ்சி பெரியவர்கள்கூட இவ்வாறு தான் கூறியுள்ளார்கள். சந்தியாவந்தனம் செய்ய நேரமிருக்காது என்று உபநயனம் செய்யாமலிருக்கக் கூடாது. நமது கலாச்சாரத்தை விட்டுவிட

கூடாது. மற்ற நாட்களில் பையன் பள்ளிக்கூடமோ அலுவலகமோ சென்றாலும் ஞாயிற்றுக் கிழமை விடுமுறை தானே? அன்று உட்கார்ந்து 1008 முறை ஜெபம் செய்ய ட்டும் அது போதும் என்று கூறியிருக்கிறார்கள்.

ஒருவருக்காக மற்றவர் அனுஷ்டானம் செய்யலாம் கணவனுக்காக மனைவி செய்யலாம். தந்தைக்காக மகன் செய்யலாம் நோய்ப்படுக்கையில் இருக்கும்பொழுதுகூட நோயாளிக்காக வேருெருவர் அனுஷ்டானம் செய்து அந்தத் தண்ணீரில் சிறிது நோயாளிக்குக் கொடுத்தால், அந்த புண்ணியம் நோயாளிக்குச் சேரும். ஆனால் அனுஷ்டானம் செய்பவரும் உபதேசம் பெற்றவராக இருக்கவேண்டும். இப்படி எத்தனையோ எளியவழிகள் உள்ளன. எனவே இயன்றஅளவு அனுஷ்டானம் செய்தால் போதுமானது. கட்டாயம் உபதேசம் கேட்கவேண்டும். காலத்தை வீணடிக்கக் கூடாது வயதான காலத்தில் உபதேசம் கேட்டால் அனுஷ்டானம் செய்யவும் முடியாது உச்சரிப்பும் சரியாக வராது.

இரு பிச்சைக்காரர்கள் பேசிக்கொண்டார்கள். ஒருவன் மற்றவனிடம் ஒருநாளும் போடாத புண்ணியவதி இன்று போட்டாள். தினம்போடும் பாவி இன்று போடவில்லை என்று சொன்னானும். கருணைக்கடலான கடவுள் அப்படியா நினைப்பார்? நிச்சயம் நினைக்க மாட்டார். எனவே செய்யா விட்டால் பாவம் பாவம் என்று, தொடங்காமலே இருப்பது தவறு. இயன்ற அளவு செய்வதே சிறந்தது.

## கட்டுப்பாடுகள் எதுவுமில்லை

உபதேசம் கேட்பதற்கு உணவு இல்லறம் முதலிய கட்டுப்பாடுகள் எதுவுமில்லை. புலால் உணவை விடுவதற்கு மனமின்றி பலர் உபதேசம் கேட்காமலிருக்கிறார்கள். அது சரியல்ல.

புலால் உணவு தவறானது

புலால் உண்ணுமலிருப்பதே நல்லது. ஏனெனில் அதிலுள்ள யூரிக்அமிலம் பல நோய்களை உண்டுபண்ணக் கூடியது. புலால் உண்பவர்களுக்கு மூலநோய் முதலியவை நீங்கவே நீங்காது. இறைச்சியை எவ்வளவு பக்குவமாக வைத்தாலும் அது அழுகியே தீரும். அழுகிய பொருளை நமதுஉடல் ஏற்றுக்கொள்வதேஇல்லை. அதைநோய்வடிவில் வெளியேற்றியே தீரும். யானை, குதிரை, ஒட்டகம் இவை யெல்லாம் பலசாலிகளாக இல்லையா? அவை கடினமாக உழைக்கவில்லையா? இறைச்சியில் உள்ள அனைத்து சத்தும் தாவர உணவில் இருக்கிறது. தருமசாத்திரப்படி 'மாம்' என்றால் என்னை என்று பொருள் 'ஸ' என்றால் அவன் என்று பொருள் என்னை அவன் சாப்பிடுகிறான். நான் அவனை சாப்பிடவேண்டும் என்று கொல்லப்பட்ட பிராணி நினைக்கு மாம் அவ்வாறே மறுபிறவியில் அது இவனைச் சாப்பிடுமாம். அதனால்தான் அதற்கு ''மாமிசம்'' என்று பெயராம். கொல்வது தான் பாவம். தின்பது பாவமில்லை என்று சிலர் கூறுகின்றனர். அது தவறு தருமசாத்திரப்படி, கொல்பவன் விற்பவன், வாங்குபவன் சமைப்பவன், சாப்பிடுபவன் ஆகிய ஐவருக்கும் பாவத்தில் சமமான பங்கு உண்டு. ''தன்னூண் பெருக்கற்குத் தான் பிறிதூனுண்பான் எங்ஙனம் ஆளும் அருள்'' என்று திருவள்ளுவர் கூறுகிறார். எனவே புலாலை விட்டுவிடுவதே சிறந்தது. அப்பொழுது தான் மேல் நிலைக்குச் செல்லலாம்.

இருப்பினும் அதை விட்டபிறகுதான் உபதேசம் கேட்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஏனெனில், பஞ்சாட்சரத் தில் ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணம், மகாகாரணம் என நான்கு வகை உண்டு. இதில் ஸ்தூலபஞ்சாட்சரம் இம்மைக்குரியது. அதற்கு ஆகாரநியமம் கிடையாது. சூட்சுமம் முதலியவை முக்திக்கு உரியவை அவற்றுக்குத்தான் ஆகாரநியமம் அவசியம் ஆறுமுகநாவலர் எழுதியுள்ள நித்தியானுட்டான

விதியில் இதைக் காணலாம் இன்னுளில் பெரும்பான்மையோர் இம்மை நலன்களுக்காகவே இறைவனை வழிபடுகின்றனர் அதற்கு ஸ்தூல பஞ்சாட்சரம் போதுமானது. ஆகாரநியமம் கிடையாது. எனவே முதலில் ஸ்தூல பஞ்சாட்சரம் எடுத்துக் கொண்டு பிறகு வேண்டுமானுல் சூட்சும பஞ்சாட்சரம் மாற்றிக் கொள்ளலாம். இதைவிட உயர்ந்தது ஒன்று இருக்கிறது என்ருல் அதையும் அடைய வேண்டும் என்றே மனிதமனம் விரும்பும் எனவே முதலில் உபதேசம் கேட்டால் பிறகு சைவமாக மாற வாய்ப்பு உண்டு. படிப்படியாகத் திருந்தலாம். இதை சாத்திரமும் அனுமதிக்கிறது. நீச்சல் தெரியாமல் தண்ணீரில் இறங்கக்கூடாது என்பார்கள் உண்மைதான் ஆனுல் தண்ணீரில் இறங்காமல் நீச்சல் எப்படிக் கற்றுக்கொள்வது? அதுபோல் பக்குவம் வந்த பிறகுதான் வழிபாட்டைத் தொடங்குவது என்று இருந்தால் காலம் வீணாகக் கழிந்துவிடும் காலம் பொன்னுனது அல்லவா? எனவே உபதேசம் கேட்க உணவுப் பழக்கம் ஒரு தடையல்ல.

## இல்லறமும் உபதேசமும்

அதுபோல் இல்லறமும் ஒரு தடையல்ல. உபதேசம் கேட்டவர்கள் தாம்பத்தியத்தில் ஈடுபட கூடாதோ என்று சிலர் நினைத்துக்கொண்டு வயதாகட்டும் என்கிருர்கள் அதுவும் சரியல்ல. இதுசன்யாசம் அல்ல. இல்லறத்துக்கும் இதற்கும் எவ்வித முரண்பாடும் கிடையாது. பஞ்சாட்சரத்தை கனவிலும் மறவாத நாயன்மார்களில் ஒருசிலர் தவிர அனைவரும் இல்லறவாசிகளே. துளாவூர் குருபரம்பரையினர் கூட இல்லறவாசிகளே. இந்துமதம் இல்லறத்தைப் பாவம் என்று கூறுவதே இல்லை. முறையான இல்லறம் ஒரு புனிதமான கடைமை என்றே அது கூறுகிறது.

இளவரசி கலாவதி சிறந்த சிவபக்தை. இவளுக்கு சிறுவயதி லேயே துர்வாச முனிவர் பஞ்சாட்சர உபதேசம் செய்து வைத்

தார். அவள் பருவமடைந்து அவளுக்குத் திருமணம் நடந்தேறியது. ஆனால் அவளுடைய கணவன் அவளை நெருங்க முடியவில்லை அவன் அருகில் வந்தால் அவளுடைய உடல் நெருப்பாகச் சுட்டது. இதன் காரணத்தையறியாத தம்பதிகள் கர்க்க முனிவரிடம் சென்று கேட்டனர். முனிவர் சிரித்துவிட்டு கலாவதி தீட்சை பெற்று பஞ்சாட்சர ஜெபம் செய்வதால் அவள் பாவங்கள் நீங்கி புனிதமானவளாக இருக்கிருள், நீ அவ்வாறில்லாததால் அவளை நெருங்கமுடியவில்லை நீயும் தீட்சை பெற்ருல் புனிதமடைவாய் என்று கூறினர். இளவரசனும் சம்மதிக்கவே முனிவர் அவனுக்கு பஞ்சாட்சரத்தை உபதேசித்தார். அவனைக் கண்மூடி அமர்ந்து ஜெபம் செய்யச் சொன்னர். அவ்வாறு அவன் செய்யச் செய்ய அவனுடைய உடலிலிருந்து ஏராளமான காகங்கள் பறந்தோடின. இளவரசனும் புனிதமடைந்து கலாவதியுடன் மகிழ்ச்சியாக இல்லறம் நடத்தினன். என்று ஸ்கந்த மகா புராணம் கூறுகிறது. எனவே உபதேசத்துக்கு இல்லறம் தடையல்ல.

# சிறுவயதிலேயே உபதேசம் கேட்க வேண்டும்

வயதானவர்கள்தான் உபதேசம் கேட்கவேண்டும் என்று பலர் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். அதுசரியல்ல சிவாகமங்களில் உள்ளபடி 7 வயது முதல் 9 வயதுக்குள் உபதேசம் கேட்பதே சிறப்பு. தருமசாத்திரங்களின் படி வைசியர்கள் 24 வயதுக்குள் உபதேசம் பெறவேண்டும். மந்திரங்களுக்கு சரியான உச்சரிப்பு மிகவும் முக்கியம். நாக்கு முற்றிவிட்டால் உச்சரிப்பு சரியாக வருவது கடினம் சிறு வயதில் ஞாபக சக்தி அதிகமாக இருக்கும் மந்திரங்களை நினைவு வைத்துக் கொள்வது சுலபமாக இருக்கும். இளமையில் பழகும் பழக்கங்கள் ஆயுள்முழுவதும் நீடிப்பதைக் காணலாம். இது பெரியோர்கள் சிறியவர்களுக்கு செய்து

வைக்கவேண்டிய ஒரு சடங்கு. அவர்கள் அதை மறந்து விருப்பத்துக்கு விட்டுவிட்டதால் தள்ளிப்போட்டுக் கொண்டே இருந்துவிடுகிறார்கள் பலாப்பழத்தை அறுப்பதற்குமுன் கையில் எண்ணையைத் தடவிக் கொள்ளவேண்டும். இல்லா விட்டால் அதன் பிசின் கையில் ஒட்டிக்கொள்ளும் சரியாக நறுக்கமுடியாது. அதுபோல் பெண்ணாசை பொன்னாசை முதலியவை ஏற்படும்முன்பே இறைப்பற்றை உறுதி செய்து கொள்ளவேண்டும். மற்ற பற்றுகள் ஏற்பட்டபிறகு இறை வழிபாட்டுக்கு இடமும் நேரமும் இல்லாமலே போய்விடும் என்று ராமகிருஷ்ண பரமஹம்சர் கூறுகிறார்.

## திருமணத்துக்குமுன்பே உபதேசம்

சாத்திரப்படி திருமணத்துக்கு முன்பே உபதேசம் கேட்க வேண்டும். காவிரிப்பூம்பட்டிணத்தில் பட்டிணத்தார் விழா பார்த்தவர்களுக்குத் தெரியும். முதல் நாள் பட்டிணத்தார் பிறப்பு. மறுநாள் திருவெண்காட்டில் அவருக்கு உபதேசம். மூன்றாம்நாள் தான் திருமணம் நடக்கும். பிராமணர்கள் ஆரியவைசியர் முதலியோர் காயத்ரி உபதேசம் பெற்ற பின்னரே திருமணம் செய்து கொள்கின்றனர். கல்யாணத் துக்கு முதல்நாள் மாமனார் செலவிலாவது பூணூல் போட்டாக வேண்டும். இல்லாவிட்டால் பெண் கொடுக்கமாட்டார்கள். கிறிஸ்தவர்களில் ஞானஸ்நானம் செய்த பிறகே திருமணம். முஸ்லீம்களும் அப்படியே பிறப்பினால் மட்டும் ஒரு மதத்துக்கு உரியவனாக எந்தமதமும் ஏற்றுக்கொள்வதில்லை மதகுருவிடம் தீட்சை பெற்று ஒரு வழிபாட்டு முறையைப் பின்பற்றினால் தான் அந்தந்த மதத்துக்குரியவர்களாக முடியும். திருமணத் துடன் தொடர்பு படுத்தப்பட்டிருப்பதால் மற்ற இனங்களில் இந்த தீட்சை கட்டாயம் நடந்து வருகிறது. நகரத்தார்கள் இந்த வழக்கத்தைக் கைவிட்டதால் தான் உபதேசம் குறைந்து விட்டது. பட்டினத்தார் காலத்தில் இருந்த வழக்கம் எப்படி மாறியது என்பது ஆச்சரியமாக இருக்கிறது. நல்லவேளை சாந்திக்குமுன்பு உபதேசம் கேட்கவேண்டும் என்பது

வைத்தார்கள். அதுவும் இல்லாவிட்டால் இந்த வழக்கம் அடியோடு மறைந்திருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மற்றநாள் முழுதும் உலகியலில் ஈடுபட்டிருந்தாலும் ஓய்வுக் காலத்திலாவது இறைவழிபாடு செய்யட்டும் என்று இந்த வழக்கம் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். அதற்காக எல்லோரும் இறுதித்தேதி வரை (LastDate) காத்திருக்க வேண்டியஅவசியமில்லை ஆர்வமுள்ளவர்கள் சிறுவயதிலேயே கேட்கவேண்டும். அவ்வாறு செய்தால் அறிவு வளர்ச்சி கல்வி வளர்ச்சி, நினைவாற்றல் போன்ற பயன்கள் கிடைக்கும் மந்திரமும் அதிகம் உரு ஏறும். அப்படியே அந்த வாய்ப்பு கிடைக்காவிட்டாலும், நாற்பது வயதுக்குப் பிறகாவது உபதேசம் கேட்டுவிடுவது நல்லது.

நரை திரை தோன்றிவிட்டால், பேரக்குழந்தை பிறந்து விட்டால், தவம் செய்யக் காட்டுக்குச் சென்றுவிடவேண்டும் என்று தருமசாத்திரங்கள் கூறுகின்றன. காளிதாசன் ரகுவமிசத்து அரசர்களை வருணிக்கும் பொழுது, அவர்கள் குழந்தைப்பருவத்தில் கல்வி கற்பதிலும், வாலிபப்பருவத்தில் இன்பங்களைத்தேடி அனுபவிப்பதிலும், முதுமைப் பருவத் தின் தொடக்கத்தில் தவம் செய்வதிலும் குறியாக இருப்பார்கள் என்று கூறுகிறுர். இது அரசர்களுக்கு மட்டு மல்ல. அனைவருக்கும் பொதுவானதே. இப்பொழுது எல்லோரும் இன்னுட்டு மன்னர்கள்தானே!

# மானிடவாழ்வின் குறிக்கோள்

மனம் போனபடி வாழ்வது நமது நாட்டின் பண்பாடல்ல. வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படவேண்டும். இதுவே நமது பாரதப் பண்பாடு. மனிதவாழ்வுக்கு ஒரு குறிக்கோள் இருக்கவேண்டும். உண்ணு வதும், உறங்குவதும், இனவிருத்தி செய்வதும் தான் வாழ்க்கை என்ருல், மற்ற விலங்குகளுக்கும் மனிதனுக்கும்

என்ன வித்தியாசம்? அவைகளுக்குப் பகுத்தறிவு கிடையாது. மனிதனுக்கு அது உண்டே? அதனுல்தானே இவன் உயர் திணை எனப்படுகிருன்? இல்லையேல் உயரத்தில் ஒட்டகச் சிவிங்கியைவிட உயர்ந்தவனு மனிதன்? இல்லவே இல்லை. பின் எதனுல் உயர்ந்தவன்? மனுஷ்யன் என்ற சொல்லே மனிதன் என்று ஆகியிருக்கிறது. அதற்கு மனம் உடையவன் என்று பொருள். எனவே சிந்திக்கும் ஆற்றல் பெற்றிருப்ப தால்தான் அவன் உயர்ந்தவனுகக் கருதப்படுகிருன். ஆனுல் வருந்தத்தக்க விஷயம் என்னவென்ருல் அவன் அந்தச் சிந்தனையாற்றலை நல்வழியில் பயன்படுத்தாமல் தீயவழி யிலேயே பயன்படுத்தி விலங்கினும் கீழ்நிலைக்குச்செல்கிருன். அடுத்தவனை ஏமாற்றுவதிலும், அணுகுண்டு வீசி அடுத்த நாட்டை அழிப்பதிலும் தான், அறிவைப்பயன்படுத்துகிருன். இதற்கெல்லாம் காரணம் தன்னைப் படைத்தவன் ஒருவன் பார்த்துக்கொண்டிருக்கிருன் என்பதை மறந்ததேயாகும்.

பகுத்தறிவு

இப்பொழுது சில மேதாவிகள் எதைஎதையோ பகுத்தறிவு என்று கூறிவருகிருர்கள். நல்லது எது? கெட்டது எது? உண்மை எது போலி எது? நிலையானது எது நிலை யற்றது எது? என்றெல்லாம் பிரித்து அறிவது தான் பகுத் தறிவு இவர்கள் எதைப் பகுத்து எதை அறிகிருர்கள் என்று தெரியவில்லை. நல்லதை எல்லாம் பகுத்து எறிகிருர்கள். இது பகுத்தெறிதலேயன்றி பகுத்தறிதலல்ல. எங்கு பார்த்தாலும் திருக்குறள் எழுதி வைத்திருக்கிருாகள் ''ஆதிபகவன் முதற்றே உலகு'' ''கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன் நற்ருள் தொழார் எனின்'' என்ற முதல் இரண்டு குறள்களை மறந்துவிடுகிருர்களே! இது என்ன குறள் பக்தியோ தெரியவில்லை.

மற்ற உயிரினங்களுக்குப் பகுத்தறிவு இல்லாவிட்டாலும் உள்ளுணர்வு இருக்கிறது. எனவே அவை இயற்கையோடு

இயைந்தே வாழ்கின்றன. அவைகளிடம் ஒழுங்குமுறை கட்டுப்பாடு எல்லாம் இருக்கிறது. எனவே அவை எவ்வளவோ நிம்மதியாக வாழ்கின்றன ஆனால் மனிதனோ பகுத்தறிவிருந்தும் அதனை முறையாகப் பயன்படுத்தாமல் மனம் போன போக்கில் வாழ்ந்து துன்பத்தை வரவழைத்துக் கொள்கிறான். இது உண்மையான மனித வாழ்க்கையாகாது. மனிதவாழ்வுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு குறிக்கோள்களை நமது இந்துமதம் விதித்திருக்கிறது. பொருள் தேடுவதிலும் இன்பம் துய்ப்பதிலும் தவறில்லை. ஆனால் அது அறத்துக்கு உட்பட்டிருக்க வேண்டும் இறுதி இலக்காகிய பேரின்ப வாழ்வுக்கு இடையூறு செய்யாமலிருக்க வேண்டும். பொருளையும் இன்பத்தையும் தேடுவது மட்டுமே வாழ்க்கை என்றால், அது அரைகுறை வாழ்க்கையே தவிர முழுமையான வாழ்க்கை ஆகாது.

இவ்வுலகுக்கு வரும்பொழுது நிறையப் புண்ணியம் கொண்டு வருகிறோம். இங்கு அதைச் செலவழித்து இன்பம் அனுபவிக்கிறோம். மீண்டும் இங்கிருந்து செல்லும்பொழுது புண்ணியம் எதுவும் சேர்க்காமல் பாவமூட்டையையா சுமந்து செல்வது? அது வெற்றிகரமான வாழ்க்கையாகுமா? நஷ்டக் கணக்கிலா வாழ்க்கை முடிவது? நன்கு சிந்தித்துப்பாருங்கள். எட்டத்து ஊருக்குப் பயணம் செல்வதானால் எவ்வளவோ சாமான்கள் மூட்டை கட்டுகிறோம். திரும்பிவராத ஊருக்குச் செல்லவேண்டுமே அதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறோம் என்று சிந்திக்கிறோமா? ஆடு, மாடு, வீடு எல்லாவற்றுக்கும் இன்ஷ்யூரன்சு செய்கிறார்கள். இந்த உயிருக்கு ஒரு இன்ஷ்யூரன்சு வேண்டாமோ? இந்த இன்ஷ்யூரன்சு ஏஜென்டு அங்கு வந்து பணம் கொடுப்பாரா? கொடுத்தாலும் அது செல்லுமா? வெளிநாடு செல்லுமுன் அந்தநாட்டுப் பணம் கொஞ்சம் வாங்கி வைத்துக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் சிரமம் ''அருளில்லார்க்கு அவ்வுலகில்லை'' என்ற

படி அறமும் தவமுமே அங்கு செல்லுபடியாகக்கூடிய செல்வ மாகும்.

மூட நம்பிக்கை அல்ல

இதெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காகக் கூறப்பட்ட கற்பனைகள் என்று சில அரசியல்வாதிகள் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்கு ஓட்டு வாங்குவதற்காகக் கூறிவருகிறார்கள். அன்புகூர்ந்து அதைக் கேட்டு யாரும் குழப்பமடையவேண்டாம் இதற்கு முன் எப்படியிருந்தாலும் இனிமேல் அப்படியெல்லாம் கூறமுடியாது. ஏனெனில் இப்பொழுது விஞ்ஞானமே மெய் ஞானத்தை நோக்கி நெருங்கிக்கொண்டிருக்கிறது. மதம் மனிதனை மயக்கும் போதைப்பொருள் என்று கூறும் கம் யூனிசக்கொள்கையுடைய ரஷ்யாவில் கூட 'சைக்கிக்' 'சயன்சு' பாராசைக்காலஜி ஆகியவற்றுக்கு காடிக்கணக்கான ரூபாய் கள் செலவு செய்து ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். உயிர் பிரியும்பொழுது நுண்ணிய புகைப்படக்கருவி மூலம் அதைப் படம் எடுத்திருக்கிறார்கள்.

ஜெர்மனியைச் சேர்ந்த கான்ஸ்டண்ட்ராவிட் என்பவர் ஆவிகளுடன் பேசி, மெக்கபோன் 'மூலம் ஆயிரக்கணக்கான குரல்களைப் பதிவு செய்திருக்கிறார். அதில் பெரும்பான்மை யான குரல்களை அடையாளமும் கண்டுபிடித்திருக்கிறாராம்.

ஒரு விஞ்ஞானி, சாகும்தருவாயிலிருந்த நோயாளி ஒருவரை மருத்துவர் அனுமதியுடன் ஒரு கண்ணாடிப் பேழை யில் வைத்து மூடிவிட்டார். அந்த நோயாளி இறந்ததும் அவருடைய உடலிலிருந்து நீலநிற ஆவி ஒன்று கிளம்பிய தாம். 'ஆகா! கண்டுபிடித்துவிட்டேன்' என்று விஞ்ஞானி மகிழ்ச்சிக் கூக்குரலிட்டுக் கொண்டிருக்கும் பொழுதே அந்தப் பேழை சுக்கு நூறாக வெடித்து ஆவி வெளியேறிவிட்டதாம்.

சிலருக்கு முற்பிறவி நினைவுகள் வருகின்றன இதைக் கணக்கெடுத்து உலகம் முழுதும் சுற்றுப்பயணம்

செய்து ஆராய்ந்தபாராஸைச்காலஜி அறிஞர்கள் முற்பிறவி என்பது உண்மையே என்று கண்டறிந்திருக்கிருர்கள் இந்தப் பிறப்புக்கு முன்னும் இதற்குப் பின்னும் உயிர் உண்டு என்று தெரிந்த பிறகு மற்ற மர்மங்கள் யாவும் தெரிந்தமாதிரிதான் உயிர்தானக இந்த உடலில் வந்து சேரவோ இதிலிருந்து பிரியவோ முடியாது. எனவே உயிரை உடலுடன் கூட்டு விப்பன், நல்வினை தீவினைகளே ஊட்டுவிப்பவனுகிய இறைவன் ஒருவன் இருந்தே தீரவேண்டும் அவனுடைய சட்டமாகிய புண்ணியம் பாவம் சுவர்க்கம், நரகம் எல்லாம் உண்மையாகவே இருக்கவேண்டும். எனவே 'கண்டதே காட்சி' என்று இருக்கக்கூடாது. நல்வழியிலேயே நடக்க வேண்டும். இறைவனை வேண்டிப் பிறவாத பேரின்ப நிலையை அடையவேண்டும். அப்படியே பிறந்தாலும் இப்பொழுது உள்ள அளவாவது நமக்கு இன்பம் கிடைக்க வேண்டுமல்லவா? அதற்கு இறைவனை வேண்டவேண்டும். மனிதன் செய்யவேண்டிய தலையாய கடமை இதுவேயாகும். இளமையிலேயே ஆன்மீகத்தில் ஈடுபடுவது நல்லது. அப்படி முடியாவிட்டால் முதுமையின் துவக்கத்திலாவது கட்டாயம் ஆழ்ந்து ஈடுபடவேண்டும்.

கடவுள் எல்லா உயிரினங்களுக்கும் நாற்பது வயது ஆயுள் அளித்திருந்தாராம் சில உயிரினங்கள் அவரிடம் வந்து தமது ஆயுளைப் பாதியாகக் குறைத்து விடுமாறு முறை யிட்டனவாம். முதலில் குரங்கு வந்தது "இந்த மனிதர்கள் என்னை மிகவும் ஆட்டிப்படைக்கிருர்கள். என்னுடைய ஆயுளைப் பாதியாக குறைத்து விடுங்கள்" என்றதாம் கடவுளும் ஒப்புக்கொண்டார். அடுத்து காளைமாடு வந்தது "நான் மாடாக உழைக்கிறேன் அப்படியும் இந்த மனிதர் களுக்குத் திருப்தியில்லை சாட்டையால் என்னை அடிக்கிருர்கள் தார்க்கம்பால் குத்துகிருர்கள். எனவே எனக்கும் இருபது

வருடம் போதும் என்றது. அடுத்து நாய் வந்தது ''நான் எவ்வளவு நன்றியுடன் இருந்தாலும் இந்த நன்றி கெட்ட மனிதர்கள் என்னை சீ நாயே போ என்று கேவலமாய் பேசுகிறார்கள் எனக்கும் ஆயுளைப் பாதியாகக் குறைத்துவிடுங்கள்'' என்றது அடுத்து வெளவால் வந்தது ''எனக்குப் பகலில் கண் தெரியவில்லை உணவு உட்செல்லும் வழியாகவே வெளியேறுகிறது. போதும் இந்த அருவருப்பான இருண்டவாழ்க்கை எனக்கும் இருபது ஆண்டுகள் போதும்'' என்றது. கடைசியாக மனிதன் வந்தான் கடவுள் ''என்ன உனக்கும் பாதி போதுமா? என்றார் அவன் உடனே அவசரமாக ''இல்லை இல்லை நான் அதிகம் கேட்பதற்காக வந்திருக்கிறேன்'' என்றான் அதற்கு இறைவன் 'உனக்கு நான் கொடுக்க நினைத்தது இருபதுதான் இருப்பினும் இந்த பிராணிகள் வேண்டாம் என்பதால் இவற்றின் ஆயுளையும் சேர்த்து நீ எடுத்துக்கொள் என்றாராம்.

குழந்தைகளுக்கு எவ்வளவு சொன்னாலும் மரத்தில் ஏறுவது 'காச் மூச்' என்று கத்துவது போன்ற சேட்டைகள் இல்லாமல் இருக்காது காரணம் இருபது வயது வரை வானரத்தின் வயதாம்! அடுத்து காளைப் பருவம் என்று பெருமையாகச் சொல்கிறார்களல்லவா? என்ன அர்த்தம்? குடும்பபாரம் முழுவதும் சுமக்கும் பருவம்! மனைவி மக்கள் முதலாளிகள் சொல்லாகிய சாட்டையால் அடிப்பார்கள் நாற்பது வரை காளையின் வயதாம். நாற்பது முதல் அறுபது வரை தான் மனிதனின்வயதாம். அப்பொழுது தான் இளமை முறுக்குக் குறைந்து வாழ்க்கையில் அடிபட்டு மனம் பக்குவமடைய ஆரம்பிக்கும். நமக்கு மேல் ஒருவன் இருக்கிறான். அவனுடைய அருளை அடையவேண்டும் என்ற நாட்டம் உண்டாகும். அதே சமயம் தவத்தைச் செய்வதற்கு உடலிலும் மனதிலும் வலுவும் இருக்கும். இதுதான் மனிதன் மனிதனாக நடந்து கொள்ளும் காலம்.

அறுபது வயதுக்குமேல் ஆனவர்கள், தயவுசெய்து கோபித்துக் கொள்ளக்கூடாது. ஏதர்வது வாயைத்திறந்தால் ''நீ சும்மாக்கிட என்று அதட்டிவிடுவார்கள். இருமல் ஆஸ்மா முதலிய நோய்களால் குறைத்துக் கொண்டும் இழைத்துக் கொண்டும் இருக்க வேண்டும். சினிமாவுக்குப் போகிறோம் வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டுப் போய்விடுவார்கள். வீட்டைக் காத்துக்கொண்டு கிடக்க வேண்டியது தான் அது நன்றியுள்ள பிராணியின் வயதாம். எண்பது முதல் நூறுவரை கண் தெரியாது, காது கேட்காது இருட்டறையில் அடைந்து கிடக்கும் வௌவாலின் வயதாம்.

எனவே வயதான காலத்தில் பார்த்துக் கொள்ளலாம் என்று நினைப்பது தவருகும். ''அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க'' நல்லகாரியத்தை நாளை என்று சொல்லாமல் இன்றே செய்யவேண்டும் என்று திருவள்ளுவர் கூறுகிறுர் ஏன்? என்ன அவசரம்? என்ருல் ''நெருனல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை உடைத்திவ்வுலகு'' நேற்று பார்த்தவனை இன்று பார்க்க முடியவில்லை நீ மட்டும் நாளை இருப்பாய் என்பது என்ன நிச்சயம் என்று கேட்கிருர். வீட்டை விட்டுக்கிளம்பினுல் திரும்பி வந்து சேருவோம் என்பதற்கு உத்தரவாதமில்லை எத்தனையோ விபத்துக்கள் கொடிய நோய்கள். இந்த நிலேயில் நாம் மட்டும் நூறுவயது வாழப் போவதாக ஒப்பந்தமா எழுதி வாங்கி வந்திருக்கிறோம்? அப்படியே வாழ்வதாக வைத்துக்கொண்டாலும் இப் போதுள்ள வசதிகள் இருக்கும் என்பது என்ன நிச்சயம்? கண் தெரியுமோ தெரியாதோ, காதுகேட்குமோ கேட்காதோ குளிக்க முடியுமோ முடியாதோ யாருக்குத் தெரியும்?

மாமன் வீட்டில் கலியாணமாக இருக்கும் மருமகனுக்கு சாப்பாடு கிடைக்காமலா போய்விடும்? இருப்பினும் கடைசி யாக சாப்பிடுவோம் என்று யாரசவது இருப்பார்களா? முதல்

பந்தியில் சாப்பிடவேண்டும் என்றே அனைவரும் விரும்புவர். நியாயம் தானே! பிறகு என்றால் வடை, பாயசம், அப்பளம் எல்லாம் இருக்குமோ இருக்காதோ. யாருக்குத் தெரியும்!

சினிமாக் கொட்டகைகளில் பாருங்கள் எவ்வளவு பேர் எவ்வளவு நேரம் வேகாத வெய்யிலில் கியூவில் நிற்கிறார்கள் நாளை பார்த்துக் கொள்ளலாம் என்று யாராவது இருக்கிறார் களா? பஸ் ஸ்டாண்டில் பாருங்கள். அடுத்த வண்டியில் போகலாம் என்று யாராவது இருக்கிறார்களா? இடித்துப் புடைத்துக்கொண்டு முதல் வண்டியில் செல்லவே அனைவரும் விரும்புவர். அடுத்த வண்டி வருமோ வராதோ இடம் இருக்குமோ இருக்காதோ யாருக்குத் தெரியும்?

இப்படி அற்பவிஷயங்களுக்கெல்லாம் அவசரப்படும் மனிதன், ஆன்மீகத்தை மட்டும் ஏன் தள்ளிப் போடுகிறான் என்பது புரியவில்லை. ஒரு வீடு தீப்பற்றிக் கொண்டது. அந்த வீட்டுக்காரன் அவசரமாக மண்வெட்டியை எடுத்துக் கொண்டு ஓடினான். எங்கே ஓடுகிறாய் என்று கேட்டால் கிணறு வெட்டப் போகிறேன் என்றானாம். கிணறு வெட்டி முடியும் வரை தீ வீட்டை விட்டு வைக்குமா? வெள்ளம் வருவதற்கு முன் அல்லவா அணை போடவேண்டும்? உடல் உறுதியாக இருக்குப்பொழுதே, "ஐம்பொறிகள் நன்கு செயலாற்றும் பொழுதே, முதுமை நெருங்குவதற்கு முன்பே ஆன்ம விடு தலைக்கு முயல வேண்டும். வீடுபற்றி எரியும் பொழுது கிணறு வெட்டப் புறப்படுவதில் பயனில்லை". அதாவது முதுமையில் தவம் செய்ய நினைப்பதில் பயனில்லை, என்று நீதி சதக ஆசிரியர் பர்த்ருஹரி கூறுகிறார்.

இராமாயணத்தில் தசரதனுக்கு அறுபதாயிரம் ஆண்டு களுக்குப் பிறகு காதருகில் ஓரிரு நரை தோன்றியதாம். அது "உனக்கு ஆயுள் முடிவு நெருங்கி விட்டது. இராமனுக்கு

முடிசூட்டி விட்டுத் தவம் செய்யத் தொடங்கு'' என்று காதருகில் சென்று இரகசியமாகக் கூறுவதுபோல் இருந்ததாம், ஆம் நரை எமனிடமிருந்து நமக்குவரும் முன்னறிவிப்பு. சிலர் இதை உணராமல் சாயம்பூசி அதை மறைக்க முயலுகின்றனர். பித்தநரை என்கின்றனர். தேன்பட்டு விட்டது என்கின்றனர். அடுத்த நினைவூட்டுக்கடிதம் வருகிறது பற்கள் ஒவ்வொன்ருக ஓய்வு பெறத் தொடங்குகின்றன. அதையும் மறைப்பதற்குப் பொய்ப்பல் கட்டிக் கொள்கிருன். கண் மங்குகிறது. கண்ணுடி அணிகிருன். காது கேட்கா விட்டால் காதுப்பெட்டி வைத்துக் கொள்கிருன். இப்படி எத்தனை நாள்தான் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ள முடியும்! கடைசியில் அரெஸ்ட் வாரண்ட் வந்துவிடும். ''கொஞ்சம் இரு. உயில் எழுதி வைத்து விட்டு வருகிறேன். கொடுத்தகடனை வாங்கிவிட்டு வருகிறேன்.'' என்ருல் யமன் கேட்கவா போகிருன்? சொல்லிக் கொள்ளாமல் புறப்பட வேண்டியதுதான். எனவே அன்பர்களே நன்கு சிந்தியுங்கள். வருமுன் காப்போனாக இருங்கள். வந்தபின் காப்பதில் பயனில்லை, வயது அதிகமாகுமுன்பே உபதேசம் பெறுங்கள் வயதானபிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று இருக்காதீர்கள்.

## நாயன்மார்களும் திருவைந்தெழுத்தும்

சிலர் நான் தேவாரம் திருவாசகமெல்லாம் படிக்கிறேனே அது போதாதா? உபதேசம் வேறு எதற்கு? என்கிருர்கள். இவர்கள் திருமுறைகள் பஞ்சாட்சரத்தைப் பற்றி எவ்வளவு உயர்வாகக் கூறுகின்றன என்பதைக் கவனிக்க வேண்டும். சம்பந்தர் பெருமான் ''வேத நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன்நாமம்'' என்று இதனைப்பாடுகிருர். ஏனென்ருல் ''கற்க வேண்டிய கலைகளுள் சிறந்தது வேதம். வேதத்தின் சிறந்த பகுதி ஸ்ரீருத்திரம் அந்தருத்திரத்தின் நடுநாயகமாக

விளங்குவது திருவைந்தெழுத்து. எனவே திருவைந் தெழுத்தை ஓதினால் நான்கு வேதங்களையும் பாராயணம் செய்த பயன் கிடைக்கும்'' என்று புராணங்கள் கூறுகின்றன.

அப்பர் பெருமான் ''துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திடாதே அஞ்செழுத்தோதின் நாளும் அறனடிக்கு அன்பதாகும்''. என்றும் ''திருவாய் பொலியச் சிவாயநம என நீரணிந்தேன் தருவாய் சிவகதி'' என்றும், ''கற்றுணை பூட்டியோர்'' கடலில் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சிவாயவே'' என்றும் தமது அனுபவத்தைப் பாடுகிறார்.

சுந்தரமூர்த்தி ஒருவர்தான் சிவபெருமானிடம் நன்கு வசூல் செய்தவர். தலையில் செங்கல்வைத்திருப்பார் அது தங்கமாக மாறும். அதைத் தங்கமாக எடுத்துச் செல்லாமல் மணி முத்தாற்றில் வீசி எறிவார். திருவாரூரில் கமலாலயத்தில் வந்து எடுத்துக்கொடு என்பார். அதுமட்டுமா? என்மனைவி கோபமாக இருக்கிறாள். நீபோய் சமாதானம் செய்துவா என்று சிவபெருமானையே ஏவுவார். சிவபெருமானும் பொற் பாதகமலங்கள் சிவக்கத் திருவாரூர்வீதியில் நடந்து செல்வார் நெற்றிக்கண்ணைத் திறந்தால் என்ன ஆகுமா? ஆனால் திறக்க முடியாது ஏன்? ''நற்றவா உன்னை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே'' அவர் மறந்தாலும் சுந்தர மூர்த்திகளின் நாவு திருவைந்தெழுத்தைச் சொல்லிக் கொண்டே இருக்குமாம். அவர் தம்பிரான் தோழர் இறைவனை நண்பனாகக் கருதி சகபாவத்தில் வழிபடுபவர் நண்பனைத்தான் பெயர் சொல்லி அழைக்க முடியும் தந்தையையோ, முதலாளியையோ அழைக்க முடியுமா? எனவே சகபாவத்தில்தான் நாமஜெபம் முக்கியத்துவத்தைப் பெறுகிறது. பஞ்சாட்சரஜெபத்தால் தான் சுந்தரருக்கு அவ்வளவு அருள் கிடைத்தது என்றால் அது மிகையாகாது.

பெயர் உயர்ந்ததா? பெயருக்கு உரியவன் உயர்ந்தவனு என்றால் பெயரே உயர்ந்தது என்று பெரியோர்கள் கூறு கின்றனர். நீங்கள் வங்கியிலிருந்து அவசரமாகப் பணம் எடுக்கவேண்டும், உங்களுக்கோ கையில் காயம். கட்டுப் போட்டிருக்கிறீர்கள் வங்கி மேலாளரிடம் சென்று ''ஐயா நேரில் நானே வந்து கேட்கிறேன். கையெழுத்தில்லாமல் கொஞ்சம் பணம் கொடுங்கள் என்றால் கொடுப்பாரா? போட்ட கையெழுத்து கொஞ்சம் மாறியிருந்தால்கூடக் கொடுக்க மாட்டார்களே? அங்கு உங்களை விட உங்கள் பெயர்தான் முக்கியம் அல்லவா? அதுபோல் தான் இதுவும் பஞ்சாட்சரம் சிவபெருமானை விட உயர்ந்தது. அன்பு வலையினால் இறைவனையே கட்டுப்படுத்தக் கூடியது. இராமன் பாலம் கட்டித்தான் கடலைக் கடக்க முடிந்தது. ஆனால் ஆஞ்சனேயனோ இராமநாமத்தைக் கூறிக்கொண்டு பால மில்லாமலே கடலைக் கடந்து விட்டான். எனவே பெயர் பெயருக்கு உரியவரைவிட உயர்ந்தது என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

மணிவாசகப் பெருமான் முதலில் பஞ்சாட்சரத்தை வாழ்த்தி விட்டுப் பிறகுதான் நாதனுடைய தாளை வாழ்த்துகிறார். அவர் ஒரு சமயம் கடலில் மாட்டிக் கொண்டார் பேரலைகள் அவரைத் தாக்கி அலைக்கழித்தன. பெருங்காற்று வேறு வீசியது இவையெல்லாம் போதாதென்று ஒரு பெரிய சுரு மீன் அவரை விழுங்குவதற்கு வாயைத் திறந்து கொண்டு வந்தது. நல்ல வேளையாக ஒரு மீனவன் அங்கு வந்து தனது படகில் அவரை ஏற்றிக்கரை சேர்த்தான். இது என்ன புதிதாக இருக்கிறதே? அவருடைய வரலாற்றில் வரவில்லையே என்கிறீர்களா? இதோ திருச்சதகத்தில் அவரே கூறுகிறார். கேளுங்கள் ''பெரும் பிறவி பௌவத்தெவ்வத்து...அஞ்செழுத் தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனைக் கரைகாட்டியாட்

கொண்டாய் மூர்க்கனேற்கே பிறவிப்பெருங்கடலைக் கடப்பதற்கு திருவைதெழுத்தே சிறந்த ஓடம் என்பது அவருடைய அசைக்க முடியாத நம்பிக்கையும் அனுபவமும் ஆகும். பஞ்சாட்சரீ பஞ்சர ரஞ்சிதாப்யாம்'' பஞ்சாட்சரம் என்ற கூண்டுக்குள் இருக்கும் கிளி பரமேஸ்வரன் என்று ஆதிசங்கரர் பாடுகிருர் பெற்றதாய்தனை மக மறந்தாலும் பெருந்தாய் பிள்ளையை மறந்தாலும் 'திருவைந்தெழுத்தை' நான் மறக்க மாட்டேன் என்று இராமலிங்க அடிகள் பாடுகிருர் ''கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் அஞ்செழுத்தைச் சொல்லாப் பிழையும்'' பொறுத்தருள வேண்டும் என்று பட்டிணத் தடிகள் பாடுகிருர் இவ்வாறு அருளாளர்கள் அனை வரும் ஒரு முகமாகப் போற்றும் திருவைந்தெழுத்தை நாமும் முறைப்படி ஓதி உய்வடைய வேண்டாமா? சொல்லுங்கள்.

# குருவின் அவசியம்

அதெல்லாம் சரி பஞ்சாட்சரம் எல்லோருக்கும் தெரிந்த மந்திரம் தானே அதை கூறுவதற்கு உபதேசம் எதற்கு? என்று சிலர் கேட்கிருர்கள். தாய் தந்தையரிடம் செல்வதற்கு இடைத்தரகர் தேவையில்லை அதுபோல் கடவுள் நாமத்தை ஜெபிப்பதற்கு குரு தேவையில்லை என்று சில மேதாவிகளும் கூறி வருகிருர்கள் அதுசரியல்ல ஏனென்ருல் சாதாரணமாக இறைவனுடைய நாமத்தை யார்வேண்டுமாளுலும் ஜெபிக்க லாம். ஆனல் மந்திரங்கள் என்பவை அவற்றிலிருந்து பொறுக்கியெடுக்கப்பட்ட சில புனிதமான ஒலிகள் அவற்றை முறைப்படி உபதேசம் பெற்றுதான் ஜெபிக்கவேண்டும். ''மந்திரமும் மருந்தும்'' என்று ஔவையார் மந்திரத்தை மருந்துடன் ஒப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது. மருந்துக் கம்பெனி விளம்பரங்களைப் பார்த்துவிட்டு நாமாகக் கண்ட மருந்துகளை அளவு தெரியாமல் சாப்பிட்டால் நோய்

குறையுமா, அதிகமாகுமா? மருந்து ஒன்ருக இருந்தாலும்? அதனுடன் உட்கொள்ளும் அனுபானம் மாறினல் பயனும் மாறிவிடும். எனவே மருத்துவரின் ஆலோசனைப்படி மருந்து சாப்பிடுவதே சிறந்தது. அது போல் பஞ்சாட்சரத்தில் இருபதைந்துக்கும் மேற்பட்ட வகைகள் இருக்கின்றன. சீடனின் பக்குவத்துக்குத்தக் கதைத் தேர்ந்தெடுப்பதற்கு குரு அவசியம் குருமூலமாகப் பெற்றால்தான் மந்திரம் பலிக்கும் தீட்சை பெறாதவர்கள் 'சிவ சிவ' என்று மட்டுமே ஜெபிக்கலாம் இதுவே சாத்திர விதி.

# நல்ல குரு

இனி யாரிடம் உபதேசம் கேட்பது என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். இப்பொழுது நகரத்தில் சிலர் யார் யாரிடமோ உபதேசம் கேட்டு விடுகிருர்கள். அது சரியல்ல ஆச்சாரியன் என்ற சொல்லுக்கு நடந்து காட்டுபவன் என்று பொருள். எனவே குருவானவர் சமயம் விசேஷம் நிர்வாணம் ஆச்சாரியம் ஆகிய தீட்சைகள் பெற்றவராகவும் அனுஷ்டானம் சிவபூஜை, அக்கினி காரியம் முதலிய சரியை கிரியைகளைச் சரிவர அனுஷ்டிப்பவராவும் யோகப்பயிற்சியும் சிவஞான நூல்களில் தேர்ச்சி பெற்றவராகவும் பிரம்மச்சாரி அல்லது கட்டுப்பாடுள்ள இல்லறவாசியாக இருக்கவேண்டும். இத்தகைய தகுதிகள் அமைய நல்ல பரம்பரையும் பயிற்சியும் அவசியம் இத்தகைய நல்லகுரு எல்லோருக்கும் எப்பொழுதும் கிடைப்பதென்பது அரிது ''மூர்த்தி தலம் தீர்த்தம்'' முறையாகத் தொடங்கினர்க்கு வார்த்தை சொல்ல சத்குருவும் வாய்க்கும் பராபரமே என்று தாயுமானவர் பாடுகிருர். இவ்வளவு தூரம் நீங்கள் சிரமப்பட வேண்டாம் என்றுதான் நகரத்தார்கள் கலாமடம் பாதரக்குடி மற்றும் துலாவூர் குரு

பீடங்களை ஏற்படுத்தியுள்ளார்கள் பூங்கொன்றை வேலங்குடி நகரத்தார் கல்வெட்டில் நகரத்தார் ஆண்களும் பெண்களும் தங்கள் குருஸ்தானங்களிடத்திலேயே தீட்சை கிரியைகள் செய்து கொள்கிறது வேறு ஒருவரிடமும் செய்து கொள்கிற தில்லை என்று தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

எவ்வளவு பெரியடாக்டராக இருந்தாலும் குடும்ப வைத்தியர் ஒருவர் இருந்தால் அவரிடம் கலந்தாலோசித்த பின்னரே புதிய மருத்துவர் சிகிச்சை தொடங்குவார். அது போல் குலகுரு ஒருவர் இருக்கும் பொழுது அவரிடம் தீட்சை பெறுவதே முறை.

பள்ளத்தூரைச் சேர்ந்த நகரத்தார் அன்பர் ஒருவர் சிருங்கேரி ஜெகத்குருவிடம் சென்று தமக்கு மந்திரஉபதேசம் செய்யும்படி கோரினார். அதற்கு ஸ்வாமிகள் ''நீங்கள் நகரத்தாராயிற்றே, உங்களுக்கு குரு இருப்பாரே, அவரிடம் உபதேசம் கேட்டுவிட்டீர்களா? என்று கேட்டார். அதற்கு அவர் இப்பொழுது தான் பட்டம் கட்டியிருக்கிறார்கள். சிறு பையனாக இருக்கிறார். எனவே நீங்களே உபதேசம் செய்ய வேண்டும் என்றுசொன்னார். அதற்கு சுவாமிகள் ''நெருப்பில் சிறியது பெரியது என்பது கிடையாது. நீங்கள் முதலில் அவரிடம் உபதேசம் பெற்று வாருங்கள் அதன்பிறகு எத்தனை மந்திரம் வேண்டுமானாலும் சொல்லிக்கொடுக் கிறேன் என்று கூறிவிட்டார்கள். எனவே நகரத்தார்கள் தங்கள் குருபீடத்தில் உபதேசம் கேட்பதே முறையும் குருபீடத்துக்குச் செலுத்தும் மரியாதையுமாகும்.

வேண்டுகோள்

இந்நூலைப் படிக்கும் அன்பர்கள் அனைவரும் அவசியம் தாங்கள் உபதேசம் கேட்பதுடன் தமது நண்பர்கள் மற்றும்

உறவினர்களுக்கும் இதுபற்றி எடுத்துக்கூறி உபதேசம் கேட்குமாறு செய்ய வேண்டுகிறோம். அத்துடன் நமது மடத்துக்குரிய இனம் நிலங்கள் ஜமீன் ஒழிப்புச்சட்டப்படி எடுத்துக்கொள்ளப்பட்டு மடத்துக்கு வருமானம் குறைவாக இருந்து வருகிறது. எனவே பூஜைப்படித்தரத்துக்காக அர்ச்சனைக்கட்டளை ஒன்று ஏற்படுத்தியுள்ளோம். அதற்கும் ரூ 101/- நன்கொடை அளிக்க விரும்புவர்கள் ''ரவிந்திர சுவாமிகள் நகரமடம் பாதரக்குடி 623 307'' என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கலாம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.





